

"புலிகளின் தாகம் தமிழீழத்தாயகம்"

வெளியீடு:

விடுதலைப் புலிகள் மகளிர் முன்னணி.

## எங்கள் பார்வையில்

# சீதனத்துக்கு எதிராகச் சட்டம்

எமது சமூகக் கட்டமைப்பில் வேரூன்றி வளர்ந்துநிற்கும் பெண் ஒடுக்குமுறை வடிவங்களில் மிகவும் கொடூரமானது, சீதன வழக்காகும்.

சீதனமுறை பெண்களின் சுதந்திரத்தையும் கௌரவத்தையும் இழிவுபடுத்துகிறது. தாம்பத்திய உறவின் தூய்மையை மாசுபடுத்துகிறது. பெண்ணின சமத்துவத்திற்கும், சமஉரிமைக்கும் விரோதியாக இருந்து வருகிறது.

வர்க்கம், சாதியம், சொத்துடைமை, சமூக அந்தஸ்து என்பன வற்றுடன் பின்னிப் பிணைந்ததாக ஒரு பூதாகரப் பிரச்சினையாக உருவகம் பெற்று நிற்கும் சீதனமுறை, பெண்ணடிமைத்தனத்திற்கு முண்டு கொடுக்கிறது. பெண்களின் வாழ்க்கையைச் சீரழிக்கிறது. ஆண் - பெண் உறவில் எத்தனையோ முரண்பாடுகளைத் தோற்றுவிக்கிறது. எமது சமூகத்திலுள்ள ஒவ்வொரு குடும்பத்தையும் பாதிக்கிறது. பெண்ணைத் திருமணச் சந்தையின் விலைப்பொருளாக மாற்றி, இழிவுபடுத்துகிறது

இந்தக் கொடுமை எமது சமூகத்திலிருந்து ஒழிக்கப்படவேண்டும். இது இன்றைய வரலாற்றுத் தேவை. மாறிவரும் சமூகச் சூழ்நிலையில், புரட்சிகரமான சமூக உறவுகளைக் கட்டியெழுப்பவேண்டிய இந்தக் காலகட்டத்தில், இந்தச் சமூக அநீதியைப் பெண்ணினம் பொறுத்துக்கொள்ள முடியாது.

இந்தத் தேவையைக் கருத்திற்கொண்டு, அண்மையில் கிளிநொச்சியில் நடைபெற்ற தமிழீழப் பெண்கள் தேசிய மாநாட்டின்போது, சீதனக் கொடுமையை ஒழிப்பதற்கும், சீதனம் வாங்கித் திருமணம் செய்யும் முறையைத் தடுப்பதற்கும், சட்ட நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படவேண்டும் என முடிவெடுக்கப்பட்டது. இந்த மாநாட்டில் வரித்துக்கொள்ளப் பட்ட வேலைத் திட்டங்களில் ஒன்றாகவும், இது ஏற்றுக்கொள்ளப் பட்டிருக்கிறது. இந்தச் சட்டத்தைப் பிரகடனம் செய்வதோடு நின்றுவிடாமல், அதனைச் செம்மையான முறையில் நடைமுறைப்படுத்தினால்தான், இந்தச் சீதனக் கொடுமையை முற்று முழுதாக ஒழிக்கலாம். அத்துடன் அதி முக்கியமாகப் பெண்ணினத்தின் முழுமையான ஆதரவும் ஒத்துழைப்பும் இருந்தால்தான், சீதனத்தை ஒழிக்கும் பணி வெற்றியடையும்.

சீதனக் கொடுமைக்கு எதிராகப் போர்க்கொடி உயர்த்தி நிற்கும் விடுதலைப் புலிகள் மகளிர் முன்னணியுடன், தமிழீழப் பெண்ணினம் அணிதிரண்டு செயற்பட்டால், பெண் விடுதலையை நோக்கிய எமது இலட்சியம் நிறைவெய்தும் என்பதில் ஐயமில்லை. ◘

# எல்லைகள் கடந்த மனிதநேயம்

' அன்பு...... இது மொழி, இனம், நாடு என்ற எல்லைகளையெல்லாம் தாண்டி வியாபித்து நிற்பது. எந்த ஆதிக்கத்துக்கும் கட்டுப்படாதது. மனிதர்களுக்கு தன் தாய்நாட்டின்மீது அன்பு ஏற்படுவது இயல்பானது. தன் நாட்டைக் கடந்து இன்னொரு நாட்டில், வேறு இனம், வேறு மொழிபேசும் மக்களிடம் மனிதர்கள் வைக்கும் அன்பு அற்புதமானது. எல்லாராலும் ஒரு அபரிமிதமான அன்பைச் செலுத்த முடியாது. ஒரு சிலரே அப்படி இருப்பார்கள். எங்கள் நாட்டில்கூட ஒரு பிறநாட்டுப் பெண் (67) சுருட்டுக்களாக, 'எங்கள்' மண்ணுக்காகச் சேவைசெய்கிறார்.

பிரித்தானியாவில் பிறந்து ஆங்கிலத்தைத் தன் தாய்மொழியாகக்கொண்ட செல்வி மியூரியல் ஹட்சின்ஸ் இங்கிலாந்தை விட்டு எங்கள் மண்ணுக்கு வந்து தங்கி, தமிழ்மொழியை இலக்கணச் சுத்தமாகக் கற்று, நாங்கள் பேசும் தமிழைவிட நல்ல தமிழில், செந்தமிழில் (பேச்சுத் தமிழல்ல, எழுத்து வழக்கில் நாம் பயன்படுத்தும் தமிழ்நடையில்) உரையாடுகிறார். எங்கள் தமிழ்ப் பெண்களைப் பராமரிக்கிறார். இராணுவ வன்முறைகள் நடைபெறும் சமயங்களில் கூட இம் மண்ணை விட்டுவிலக மறுக்கிறார். நீண்ட தூரத்திற்கு அப்பாலுள்ள நாட்டில் பிறந்திருந்தாலும் ஹட்சின்ஸ் அம்மையார் மொழியைக் கடந்து, உள்ளங்களையும் உணர்வுகளையும் நேசிப்பதால்தான், தனக்குச் சம்பந்தமே இல்லாத ஒரு மண்ணில் பணிபுரியும் ஆர்வம் வந்தது.

இந்த அன்பு நெஞ்சத்தைச் சந்திக்கிறோம்.

"எப்போது அம்மா இங்கே வந்தீர்கள்?"

"1926 இல் இங்கிலாந்திலிருந்து ஆங்கில வாத்தியாராக இலங்கைக்கு வந்தேன். கிறிஸ்தவ திருச்சபை என்னை அனுப்பிவைத்தது. சுண்டுக்குளி பெண்கள் பாடசாலையிலும், உடுவில்பெண்கள் பாடசாலையிலும் ஆங்கிலம் கற்பித்தேன். அதன் பின் கோப்பாய் கிறிஸ்தவக் கல்லூரியில் அதிபராக இருந்தேன். கிளிநொச்சியில் வேலை செய்வதற்கு திருச்சபை கேட்டபோது, கிளிநொச்சி காடாக இருந்ததால் எல்லோரும் மறுத்து விட்டார்கள். என்னை உங்களுக்கு விருப்பமான இடத்தில் பாவியுங்கள் என்று நான் விண்ணப்பித்திருந்ததால், என்னை அனுப்பினார்கள். நான் இங்கே வந்தபோது எல்லாமே ஒரே காடாக இருந்தது. காட்டுக்குள்ளே மக்கள் ஏதோ விதமாகச் சீவித்துக் கொண்டிருந்தார்கள். நான் அவர்களுக்கு உதவ நினைத்தேன். 1955 இல் கருணா நிலையத்தை ஆரம்பித்தேன்.

அநாதரவான, கணவனால் கைவிடப்பட்ட, ஏமாற்றப்பட்டுக் குழந்தைகள் பெற்ற பெண்களைப் பராமரித்தேன். இலங்கை, இந்தியா என்பன சுயாதீனமான அரசுகளானபோது திருச்சபை தனது நிதியுதவியை நிறுத்தியது. பராமரிப்பு நிலையத்தை என்னையே சுயாதீனமாக இயக்குமாறு அறிவித்தது. நான் எனது பென்ஷன் பணத்தின் மூலம் நிலையத்தைப் பராமரித்தேன். துணியினால் ஆன மேசை விரிப்பு, கயிற்றுப் பின்ன

வினால் ஆன மேசை விரிப்பு, தலையணை உறைகள் முதலியவற்றை நானே தைத்து, ரயிலேறி யாழ்ப்பாணத்தில் போய் விற்றுவிட்டு வருவேன். ஒரு கட்டிடமாக இருந்த கருணா நிலையத்தின் ஏனைய கட்டிடங்களை என் உழைப்பின் மூலமே கட்டினேன்."

ஹட்சின்ஸ் அம்மையாரின் கருணா நிலையத்தில் பணிபுரியும் செல்வி எஸ்தர் கூறினார்:

"தன் உழைப்பினாலும் முயற்சியாலுமே இவர் கருணா நிலையத்தை இந்த அளவுக்கு வளர்த்தார். கட்டிடம் கட்டுவதற்காக ஒவ்வொரு பை சீமெந்தையும் இவர் தன் சைக்கிள் தாங்கியிலேயே கட்டிக் கொண்டுவந்து சேர்த்ததை. இப்போது கேட்டாலும் இந்த ஊரிலுள்ள வயோதிபர்கள் கூறுவார்கள்."

மீண்டும் நாங்கள் ஹட்சின்ஸ் அம்மாவுடன் உரையாடினோம்.

"தமிழ் படிக்கவேண்டும் என்ற ஆர்வம் எப்போது அம்மா உங்களுக்கு ஏற்பட்டது?"

"தமிழர்கள் மத்தியில் இருந்தேன். அவர்கள் தமிழைப் பற்றிப் பெருமைப்பட்டார்கள். நான் தமிழைப் பற்றி விசாரித்தேன். தமிழ் தெரியாமல் தமிழர்களிடையே செயற்பட முடியாது என்பதால், ஒக்ஸ்போட்டுக்குப் போய் ஒருவருடம் தமிழும் கிரேக்க மொழியும் படித்தேன். தமிழும் கிரேக்கமும், ஒரே இயல்பைக் கொண்ட மொழிகளாதலால் படிப்பது இலகுவாக இருந்தது. இங்கிலாந்தில் நின்ற ஒரு வருடத்தில் கருணா நிலையத்துக்காகக் காசு சேர்த்து வந்தேன்."

"என்ன காரணத்தினால், பாதிக்கப்பட்ட பெண்களைப் பராமரிக்க வேண்டும் என்று நினைத்தீர்கள்?"

நெற்றியில் கையை வைத்தவாறு சிறிது நேரம் யோசித்த ஹட்சின்ஸ் அம்மையார் சொன்னார்: "ஞாபகமில்லை.எனக்கு எல்லாமே மறந்து போய் விட்டது."

சிறிது நேரத்தில் மீண்டும் அவரே கதைத்தார்.

"எனக்கு 93 வயது. இந்த வயதில் மூளை இராது. ஆனால் கடவுள் கிருபையால் எனக்குக் கொஞ்சம் புத்தி உள்ளது: கொஞ்சம் ஞாபகம் உள்ளது: அதனாலேயே உங்களுடன் சம்பாஷிக்க முடிகிறது."

இந்நேரம் செல்வி எஸ்தர் கூறினார்:

"இங்கே ஒரு பெண் ஏமாற்றப்பட்டு வயிற்றில் குழந்தையுடன் அம்மாவிடம் வந்து, தன்னைக் காப்பாற்றுமாறு கேட்க, அவரைப் பார்த்தே கருணா நிலையம் ஆரம்பிக்கப்பட்டதாக ஒரு கதை உள்ளது."

மியூரியல் ஹட்சின்ஸ் அம்மையாருக்கு இரு தங்கைகள். ஒருவர் இறந்து விட்டார். மற்றவருக்கு 4 குழந்தைகள் உண்டு.

"நீங்கள் இங்கே வந்த பின்னர் உங்கள் குடும்பத்தினரைப் போய்ப் பார்க்கவில்லையா?"

"இரண்டு தடவைகள் இங்கிலாந்துக்குப் போய் அவர்களைப் பார்த்தேன்."

"நீங்கள் இங்கேயே இருந்து பணிபுரிய உங்கள் பெற்றோர் அனுமதித்தார்களா?"

"நான் இங்கிலாந்தில் இருக்கும்போதே மிஷனரியில் இருந்தேன். அவர்கள் தான் என்னை இங்கே அனுப்பினார்கள் 26 வயதில் நான் வந்தேன். பெற்றோர் எதுவும் சொல்லவில்லை"

"நீங்கள் ஏன் இங்கிலாந்துக்குத் திரும்ப நினைக்கவில்லை. வயோதிப நேரத்தில் உங்கள் சொந்த மண்ணில் வாழவேண்டும் என்ற ஆவலில்லையா?"

"கடவுள் எனக்கு ஒரு ஊழியம் கொடுத்தார். நான் அதை மறுக்கக் கூடாது. அதனால் தான் நான் இந்த மண்ணிலேயே என் பிள்ளைகளுடன் இருக்கிறேன்."

இந்த நேரம் செல்வி எஸ்தர் எங்களிடம் சொன்னார்.

"அம்மாவுக்கு இங்கே தான் பராமரித்த பிள்ளைகளுடன் இருப்பதுதான் சந்தோஷம். அதோ பாருங்கள் அந்த அம்மாவை (நரைத்த தலை முடியைக் குட்டையாக வெட்டி, சட்டை அணிந்து

நின்ற ஒரு பெண்ணைச் சுட்டிக்காட்டினார். பார்வைக்கு மனநிலை சரியில்லாதவர் போல் அவர் தோன்றினார். ) அவருக்கு இப்போது 60 வயது. இவர் 3 வயதில் மனநிலை பாதிப்படைந்து வீதிகளில் ஆன்பாட்டில் திரிந்தபோது, அம்மா இவரைக் கண்டு, கொழும்புக்குக் கூட்டிக்கொண்டு போய் வைத்தியம் செய்தார். வைத்தியம் பலன் தராததால் தன்னுடன் கருணா நிலையத்தில் வைத்திருக்கிறார். எத்தனை வயது என்று அவரிடம் கேட்டுப்பாருங்கள். 3 வயது என்று சொல்வார். 3 வயதுக் குழந்தையின் மனவளர்ச்சிதான் அவருக்கிருக்கிறது.''

நாங்கள் சிறிது நேரம் அவரையே பார்த்துக் கொண்டிருந்தோம். அவர் எங்களைப் பார்த்து விட்டு ஹட்சின்ஸ் அம்மாவிடம் ''குட்நைற்'' என்று சொல்லிவிட்டு ஓடினார். செல்வி எஸ்தர் தொடர்ந்து சொன்னார்:

''இவரைப் போல பலரை அம்மா தானே கொழும்புக்குக் கூட்டிக்கொண்டு போய் வைத்தியம் செய்தார். நான் அம்மாவிடம் வேலை செய்ய வந்த ஆரம்பத்தில் ஒருநாள், அம்மா என்னிடம் சொன்னார். ஏமாற்றப்பட்டு வயிற்றில் குழந்தையுடன் தன்னிடம் வந்த ஒரு இளம் பெண்ணை குழந்தை பெறுவதற்காக கிளிநொச்சி வைத்தியசாலைக்குக் கூட்டிப் போய், குழந்தை பிறந்ததும் தாயின் அனுமதியுடன் குழந்தையை வேறு ஒருவரிடம் வளர்க்கக் கொடுத்து விட்டு வெளியே வரும்போது, ஒரு ஆண் தன்னிடம் வந்து, அந்தப் பெண்ணைத் திருமணம் செய்யப் போவதாகக் கேட்டாராம். அந்தப் பெண் பற்றிய விபரத்தைச் சொன்ன பின்னரும் அவர் தன் முடிவில் உறுதியாக இருந்ததால், அவர்களின் திருமணத்தைத் தானே நடத்தி வைத்ததாகச் சொன்னார்.''

இப்போது கருணா நிலையத்தில் ஆசிரியையாகப் .பணிபுரியும் ஜீவா என்பவர் கூறினார்:

''1990 ஜூனில் சிறிலங்கா இராணுவத்துக்கும் புலிகளுக்கும் சண்டை நடந்த போது, அம்மா முதலில் கிளிநொச்சியை விட்டு வரமாட்டேன் என்று சொல்லிவிட்டார். பின்னர் பிள்ளைகள் பயத்தில் அழுததால் இடம் மாற ஒப்புக்கொண்டார். எல்லோரும் முறிப்புக் காட்டுக்குள் போயிருந்தோம். அப்போது அம்மாவுக்கு 90 வயது. காட்டில் குடிக்கத் தண்ணீரில்லை; மலசல கூட வசதியில்லை; ஆனாலும் சமாளித்துக் கொண்டார்.''

ஹட்சின்ஸ் அம்மாவிடம் கேட்டோம்,

''சிந்திக்கும்போது அவரவர் மொழியில் தான் சிந்திக்கலாம். உங்களுக்குத் தமிழும் தெரியும் ஆங்கிலமும் தெரியும். நீங்கள் எந்த மொழியில் சிந்திப்பீர்கள்?''

''தமிழ் படித்ததால் தமிழ் கதைத்துக் கொண்டிருக்கிறேன். தமிழிலே யோசிப்பேன் சில வேளைகளில் ஆங்கிலமும் வரும். ஆனால் இப்போது தமிழில் நன்றாக யோசிப்பேன்.''

''உங்கள் கனவுகள் ஆங்கிலத்திலா தமிழிலா தோன்றுகின்றன?''

''கனவில் வரும் காட்சிகளில் சிலர் தமிழ் பேசுவார்கள்; சிலர் ஆங்கிலம் பேசுவார்கள்.

மனிதர்கள் எப்போதுமே தமது தாய் மொழியில்தான் யோசிப்பார்கள்; கனவு காணுவார்கள். அப்படியில்லாமல் இன்னொரு மொழியில் யோசிக்கிறார்கள்; கனவு காணுகிறார்களென்றால், அது தேசம் கடந்த நேசத்தால் மட்டுமே உண்டாவது. ஹட்சின்ஸ் அம்மாவை நாம் சந்தித்தபோது, கண் பார்வை மங்கி, பழைய ஞாபகங்கள் பலவற்றை மறந்து, உடல் தளர்ந்து, சக்கர நாற்காலியில் அமர்ந்திருந்தார். அவருக்கு மிக நெருக்கமாக அமர்ந்து அவர் கூறுவதையெல்லாம் எழுதிக் கொண்டிருந்த என்னிடம் கேட்டார்:

''நீங்கள் எழுதுவதை உங்களால் படிக்க முடியுமா?''

''ஓம், படிப்பேன்,'' என்று சொன்னேன் அதற்கு அவர் கூறினார்:

''ஆம் உங்கள் விழிகள் பிரகாசமானவை- என்னால் படிக்க முடியாது.''

அவருடன் நாமிருந்த 150 நிமிடங்களிலும் சேச்மிஷன், பென்ஷன் என்பதைத் தவிர்ந்த, வேறெந்த ஆங்கிலச் சொல்லையுமே அவர் உபயோகிக்கவில்லை. எங்கிருந்தோ வந்து, எங்கள் மண்ணில் மனித நேயத்துடன் சேவை செய்யும் ஹட்சின்ஸ் அம்மையாருக்கு நன்றி கூறி விட்டு நாம் அவரிடம் விடைபெற்ற போது, அவர் எமக்குச் சொன்னார்.

''சென்று வாருங்கள் தமிழ்ப் பிள்ளைகளே.''

# தமிழீழப் பெண்களின்

## தேசிய மாநாடும் எழுச்சிப் பேரணியும்

தேசிய சமூக ஒடுக்குமுறை வடிவங்களால் நாளும் நாளும் வேதனைகளை அனுபவித்துக் கொண்டிருக்கும் தமிழீழப் பெண்களின் வாழ்வு விடிய வேண்டுமென்றால், அனைத்துத் தமிழீழப்பெண்களுமே அணி திரண்டு போராட வேண்டும், இந்த உண்மையை எல்லாப் பெண்களும் புரிந்துகொள்ள வேண்டும் என்பதற்காகவும், விடுதலைப் புலிகள் மகளிர் முன்னணியின் தலைமையில் அனைவருமே அணிதிரண்டு போராடுவதனூடாக விடிவு நிச்சயம் கிடைக்கும் என்ற நம்பிக்கையை உறுதிப்படுத்துவதற்காகவும் அனைத்துலக மகளிர் நாளை ஒட்டி, விடுதலைப் புலிகள் மகளிர் முன்னணியால் கிளிநொச்சி கனிஷ்ட வித்தியாலயத்தில் மார்ச் 7ஆம் 8ஆம் நாள்களில் தமிழீழப் பெண்களின் தேசிய மாநாடு நடைபெற்றது.

அனைத்து ஒடுக்குமுறை வடிவங்களாலும் சுரண்டல் முறைகளாலும் மிகமிக மோசமாகப் பாதிக்கப்படுகின்றவர்கள் பெரும்பாலும் உழைப்பாளிப் பெண்களாகவே உள்ளனர். அதனால் தான் உடல் உழைப்பால் தம்வாழ்வைக் கொண்டு நடத்தும் பெண்களே பெருமளவில் வாழும் வன்னிப் பிராந்தியத்தில் இந்த மாநாடு நடத்தப் படுவதே பொருத்தமானது என நினைத்து, விடுதலைப் புலிகள் மகளிர் முன்னணி இரண்டாம் மாதமே அதற்கான தயாரிப்பு வேலைகளில் இறங்கியது. பெண்களை ஒருங்கிணைத்து, அவர்களுடன் கலந்துரையாடி, பெண்கள் தமது விடிவுக்காகத் தாமே தான் போராடவேண்டும் என்பதைத் தெளிவுபடுத்தியது. வன்னிப்பிராந்திபத்திலும், யாழ்குடாநாட்டிலும் வாழும் பெண்கள் இந்த மாநாட்டுக்கான வேலைகளில் ஆர்வத்துடன் ஈடுபடும் விதத்தில், விடுதலைப் புலிகள் மகளிர் முன்னணியினர் தமது வேலைகளைச் செய்தனர்.

சிறீலங்கா அரச இராணுவம் தனது இராணுவ நடவடிக்கைகளை விஸ்தரித்து தமிழ் மக்களைச் கொன்றொழித்து வரும் இவ்வேளையில் மன்னார், வவுனியா, கிளிநொச்சி, முல்லைத்தீவு, திருகோணமலை, மட்டக்களப்பு, யாழ்ப்பாணம் உட்பட அனைத்து மாவட்டங்களிலிருந்தும் பெண்கள் வந்து கலந்து கொண்டமை, தமிழீழப் பெண்ணினத்தின் விழிப்பை மட்டுமல்லாமல் இவர்கள் ஓரணியாய்த் திரண்டு போராடவும் தயாராயுள்ளார்கள் என்பதையும் எடுத்துக்காட்டியது. பெண்களே முற்றுமுழுதுமாக பங்குபற்றி பெண்கள் எதிர்நோக்கும் பிரச்சினைகளை அலசி ஆராய்ந்து பெண்ணினம் விடுதலைப் அடைவதற்கேற்ப குறிக்கோள்கள் நோக்கங்களை வரையறுத்து அதற்கமைய வேலைத்திட்டங்களை முன்வைத்து, அவற்றைப் பற்றிக் கலந்தாலோசித்து தீர்மானங்களை நிறைவேற்றினர்

இந்த நிகழ்வு தமிழீழ வரலாற்றில், குறிப்பாக தமிழீழப் பெண்ணினத்தின் போராட்டப் பாதையில் நம்பிக்கை ஒளியூட்டும் புதிய திருப்புமுனையாகும்.

தமிழீழப் பெண்களின் தேசிய மாநாட்டை விடுதலைப் புலிகள் மகளிர் படைப்பிரிவின் துணைத்தளபதி செல்வி ஜெனி தேசியக்கொடியேற்றி ஆரம்பித்து வைக்க, மகளிர் படைப்பிரிவைச் சேர்ந்த செல்வி சாந்தி விளக்கேற்றினார். மண்மீட்புப் போரில் வீரச்சாவெய்திய போராளிகளுக்காகவும், மரணத்தைத் தழுவிக்கொண்ட மக்களுக்காகவும், இரண்டு நிமிட நேரம் மௌன அஞ்சலி இடம்பெற்றது. தொடர்ந்து, 1990 ஆம் ஆண்டு மகளிர் முன்னணியால் நடாத்தப்பட்ட மகளிர் மாநாட்டில் கலந்துகொண்டு இரண்டு மாதத்தின் பின் சிங்கள இராணுவத்தால் கொல்லப்பட்ட தென் தமிழீழத்தைச் சேர்ந்த திருமதி சிசிலியாவையும், அம்மாநாட்டில் கலந்து கொண்டு இன்று எம்மிடையில் இல்லாத கப்டன் பிரபா, கப்டன் சுந்தரி, கப்டன் சுஜாத்தா, கப்டன் அமுதினி, கப்டன் வானதி, கப்டன் கஸ்தூரி ஆகியோரை நினைவு கூர்ந்து, வன்னிப் பிராந்தியப் பொறுப்பாளர் செல்வி ரதி விசேட அஞ்சலி உரை நிகழ்த்தினார். கிளிநொச்சி மாவட்டப் பிரதிநிதி திருமதி. இ. கமலாம்பாளின் வரவேற்புரையைத் தொடர்ந்து, விடுதலைப் புலிகள் மகளிர் முன்னணிப் பொறுப்பாளர் செல்வி ஜெயா




" தமிழீழப் பெண்களின் இன்றைய நிலை குறித்து கலந்துரையாடவும் தேசிய விடுதலைப் போரிலும் சமுதாய விடுதலைப் போராட்டத்திலும் சமூக மேம்பாட்டு வேலைகளிலும் பெண்களை எவ்வாறு இணைத்துச் செல்வது என்றும், வளர்த்துச் செல்வது என்றும் ஆராய்வதற்காகவும் இம்மாநாட்டைக் கூட்டியிருக்கின்றோம்',

என்று தனது தலைமையுரையைத் தொடங்கியவர்,

" தேசிய விடுதலைப் போராட்டத்தில் பெண்களுடைய பங்கு எவ்வாறு உள்ளது என்பதை உலகநாடுகள் அவதானித்துக் கொண்டிருக்கின்றன. தமிழீழ விடுதலைப் போரில் ஆண்போராளிகளுக்குச் சரிசமமாக நின்று பெண் போராளிகள் போராடிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் எமது நாட்டின் பெண்களின் சனத்தொகை வீதத்தோடு ஒப்பிடும்போது போராட்டத்தில் இணையும் பெண்களின் தொகை குறைவாக உள்ளது. இதனையிட்டு நாம் உள்ளூர மனவேதனைப்பட்டாலும் அவர்கள் இணைவதற்குத் தடையாக உள்ள காரணிகளை ஆராய்ந்து, அவற்றைத் தகர்க்கும் விதத்தில் எமது செயற்பாடுகளை அமைக்க வேண்டும். பெண்களிடம் தன்னம்பிக்கையையும் ஆளுமையையும் வளர்க்கும்விதத்தில் செயற்படவேண்டும். பிற்போக்கான பழைமைவாத சித்தாந்தங்களால் பெண்கள் அழுத்தப்படுகின்றார்கள். தம்மீது திணிக்கப்பட்டுள்ள சமூக அழுத்தங்களைப் பெண்கள் புரிந்துகொண்டு அதிலிருந்து விடுபடவேண்டும், இதற்கேற்ப மாநாட்டின் நோக்கங்கள். குறிக்கோள்கள் ஒழுங்கமைக்கப்பட்டன. இவைகளுக்கு அமைவாக வேலைத்திட்டங்களைச் செயற் படுத்தவேண்டும் ''

என்று தொடர்ந்தார் தொடர்ந்து சீதனம், கல்வி, சமூக வழக்கங்கள், ஆணாதிக்க வன்முறை, விபச்சாரம், வேதனைப் பாகுபாடு உட்பட பெண்கள் எதிர்

கொள்ளும் அனைத்துப் பிரச்சினைகளைப் பற்றியும் கலந்துரையாடப்பட்டது.

### சீதனம்:

பெண்கள் மீதான ஒடுக்குமுறை வடிவங்களில் மிகக் கொடுமையான சீதனம் பற்றி மாநாட்டில் கலந்து கொண்ட பெண் பிரதிநிதிகள் பெரும்பாலான பெண்களின் வாழ்வு சீர்குலைந்து போவதற்கு சீதனமே காரணமாக இருக்கின்றது என்றும், சீதனம் கொடுப்பதும் வாங்கப்படுவதும் நிறுத்தப்பட்டால் மட்டுமே பெண்களுக்கு விடிவு கிடைக்கும் எனவும், சீதனத்தைத் தடுத்து நிறுத்த சட்டம் கொண்டு வரவேண்டுமென்றும் தமது கருத்தைத் தெரிவித்தார்கள். அத்துடன் சீதனத் தடைச் சட்டத்தைச் சரியான முறையில் அமுல் நடத்த பெண்களின் ஒத்துழைப்பின் முக்கியத்துவத்தை நாம் அறிந்துள்ள அதே வேளை, அதனைப்பற்றி தமிழீழத்துப் பெண்கள் அனைவரும் விளங்கிச் செயற்படுமாறு நமது வேலைகளை அமைத்துக் கொள்வோம் என்றும், சொன்னார்கள்.

### கல்வி:

தம்மீது திணிக்கப்பட்டுள்ள தேசிய, சமூக ஒடுக்குமுறை வடிவங்களால் தம் தனித்துவங்கள் உடைந்து நொருங்கிக் கொண்டிருப்பதோ, தம் வாழ்வு வெற்று வாழ்வாக அமைந்துள்ளதோ தெரியாமல், பல பெண்கள் வாழாமல் வாழ்ந்து கொண்டு இருக்கின்றார்கள். இதற்குக் காரணம் போதிய கல்வி அறிவு இல்லாமையே ஆகும். தமிழீழ சனத்தொகையில் அரைப்பங்கிற்கும் மேலாகப் பெண்கள் இருந்தும், விடுதலைப் போராட்டத்தில் பெண்கள் பங்குபற்றும் தொகை குறைவாக இருப்பதற்கும் இக்கல்வி அறிவின்மைதான் காரணம் என்பதால், பெண்களிடையே விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தும் விதத்தில் பெண்களுக்கான கல்வியில் அக்கறை எடுக்கவேண்டும் என்ற கருத்துக்கள், இம் மாநாட்டில் தெரிவிக்கப்பட்டன. வளர்ந்தோர் கல்வித் திட்டம் உருவாக்குவது பற்றி கலந்துரையாடப்பட்டது.

### சமூக வழக்குகள்:

சமூக வழக்குகளூடாக பெண்களை வீட்டுக்குள் முடக்குவது ஆணாதிக்க சமூகத்துக்கு இலகுவாக உள்ளது என்றும், அவற்றிலிருந்து விடுபடத் துணிவு அற்றவர்களாகப் பெண்கள் உள்ளார்கள் என்றும், கருத்துக்கள் தெரிவிக்கப்பட்டன. பெண்ணினத்தின்மீதான ஒடுக்குமுறை வடிவங்கள்தான் இவை என்பதைப் புரிந்து கொண்டு, பெண்கள் அதிலிருந்து விடுபடும் விதத்தில் எமது வேலைத்திட்டங்கள் அமைக்கப்படவேண்டும் என்ற யோசனை முன் வைக்கப்பட்டது.

### ஆணாதிக்க வன்முறை:

ஒரு பெண் மனிதப் பிறவியாகக் கருதப்படாமல் ஆண்களால் அடித்துத் துன்புறுத்தப்படுகின்றாள். ஆனால் பெண்ணாகப் பிறந்தால் இப்படி ஒரு விதி எல்லோருக்கும் உண்டு என்று அந்த அநீதியை எதிர்க்காமல் தனக்குள் உடைந்து கொண்டிருக்கும் பெண்ணினம், இந்த விதியை மாற்றி அமைக்க வேண்டும் என்பதை விளங்கிக்கொண்டு செயற்படும் விதத்தில், எமது வேலைகள் அமைய வேண்டும் என்பதில் மாநாட்டில் கலந்துகொண்ட பெண் பிரதிநிதிகள் உறுதியாக இருந்தார்கள்.

### விபச்சாரம்

அரச இராணுவத்தின் அழிப்பு நடவடிக்கைகளால் பாதிப்புற்று, வாழும் வகை தெரியாமல் விபச்சாரத்தில் ஈடுபடவேண்டிய நிலைக்கு பெண்கள் தள்ளப்படும் கொடுமையைப்பற்றிய கலந்துரையாடலின்போது, பெண்கள் தம் சொந்தக் காலிலேயே நிற்கும் விதத்திலான வேலைத்திட்டங்கள் உருவாக்கப்படுவது பற்றிப் பேசப்பட்டது.

### வேதனப் பாகுபாடு:

ஆணும் பெண்ணும் ஒரே வேலையைச் செய்தாலும் பெண்ணுக்குக் குறைந்த கூலியே

வழங்கப்பட்டு, இழி நிலைக்குத் தள்ளப்படும் நிலை மாற்றப்படவேண்டும் என்று சொல்லப் பட்டது.

இவ்வாறாக பெண்கள் எதிர்நோக்கும் அனைத்துப் பிரச்சினைகளும் ஆராயப்பட்டன.

கலந்துரையாடலின்போது உரையாற்றிய விடுதலைப் புலிகள் மகளிர் முன்னணியின் முக்கிய உறுப்பினரான செல்வி மாலினி,

"இதுவரைகாலமும் பெண்களுக்கு இழைக்கப்படும் அநீதிகளை எண்ணி எண்ணி மனதுக்குள் குமுறிக்கொண்டிருந்த பலருக்கு, இந்த மாநாடு சரியான களம் அமைத்துக் கொடுத்திருக்கிறது. இதனைச் சரியாகப் பயன்படுத்தி, எல்லோரும் துணிவுடன் தமது கருத்தை வெளிப்படுத்தினார்கள். இவற்றுக்கெல்லாம் சரியான தீர்வு காண நாமும் உழைப்போம் என்ற இவர்களின் உறுதியை, இங்கே கண்டோம். இந்த உறுதியுடன் உள்ள நீங்கள் மகளிருக்கான வேலைத் திட்டங்களைச் செயற்படுத்துகையில் எதிர்கொள்ளும் பிரச்சினைகளுக்கு முகங்கொடுக்கத் தயாராக வேண்டும். அதற்கேற்ப நீங்கள் பயிற்சி பெற்றவர்களாக இருக்கவேண்டும். எங்கே பெண் மிகவும் அடக்குமுறையை அனுபவித்துக் கொண்டிருக்கின்றார்கள் என்பதை அறிந்து, எம்மோடு இணைந்து அவற்றைக் களைவதற்காகச் செயற்படவேண்டும்" என்று கூறினார்.

விடுதலைப் புலிகள் மகளிர் முன்னணியின் யாழ். மாவட்டப் பொறுப்பாளர் செல்வி ஆர்த்தி சீதனக் கொடுமையைப் பற்றிக் கூறும் போது சீதனததுக்கும் சாதியத்துக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதைச் சுட்டிக்காட்டி, சீதனத்தை ஒழிக்க வேண்டுமானால் முதலில் சாதியத்தை ஒழிக்கவேண்டும் என்றார். ஒரு பெண் குற்றம் செய்தால் அவளைக் குற்றவாளி என ஒதுக்கித் தள்ளாமல், அவளின் அந்த நிலைக்குக் காரணத்தை ஆராய்ந்து கொள்ளலாம் என்றும் அதன்பின்னர் அவளுக்குச் சரியான பாதையை அமைத்துக் கொடுப்பதற்கான வேலைத் திட்டங்களில் ஈடுபடுத்தலாம் என்றும் சொன்னார். தொடர்ந்து உரையாற்றும்போது, மாநாட்டுக்கு தமிழீழத்தின் சகல மாவட்டங்களிலிருந்தும் வந்த பிரதிநிதிகள், வெளியே பெண்கள் எதிர்நோக்கும் பிரச்சினைகளைச் சந்திக்கும்போது பெண்களுக்கு மாநாட்டின் நோக்கங்கள், குறிக்கோள்கள், வேலைத்திட்டங்களைப்பற்றிச் சரியான முறையில் விளக்கி, அவர்களை அணிதிரட்டவேண்டும் என்று கூறினார்.

கலந்துரையாடலின் இறுதியில் முழுமையான முறையில் ஒழுங்கமைக்கப்பட்ட நிலையில் மாநாட்டின் நோக்கங்கள், குறிக்கோள்கள், செல்வி ஜெயராவால் வாசிக்கப்பட்டன.

இரண்டாம் நாள் நிகழ்ச்சியில் முதல், நாள் விவாதிக்கப்பட்ட வேலைத்திட்டங்கள் தொடர்ந்தும் விவாதிக்கப்பட்டு, சபையோரின் அங்கீகாரத்துக்கு விடப்பட்டு ஏற்றுக் கொள்ளப்பட்டன-

## நோக்கங்களும் குறிக்கோள்களும்

1. சமூக, அரசியல், பொருளாதார வழியில் தமிழீழப் பெண்ணினம்மீது பிரயோகிக்கப்படும் சகல ஒடுக்குமுறை, சுரண்டல் முறை வடிவங்களுக்கு எதிராகப் போராடுவது.

2. பிற்போக்கான, பழைமைவாதச் சித்தாந்தங்களிலிருந்து தோற்றங்கொண்டு பெண்ணினத்தை இழிவுபடுத்திவரும் கருத்துருவங்கள். படிமங்கள், தவறான பார்வைக

ளுக்கு எதிராகப் போர் தொடுப்பதுடன், பெண்கள்பற்றிய முற்போக்கான, எதார்த் தமான கண்ணோட்டத்தை முன்னெடுப்பது.

3. பாலியல் வேறுபாட்டின் அடிப்படையில் தொழிற்துறையில் பெண்களுக்குக் காட்டப் படும் பாரபட்சத்துக்கு எதிராகப் போராடு வது.

4. ஆணாதிக்கத்துக்கு எதிராகவும், ஆண்கள் பெண்ணினத்தின்மீது கட்டவிழ்த்துவிடும் வன்முறை வடிவங்களுக்கு எதிராகவும் போராடுவது.

5. பெண்ணின் கௌரவத்தையும் சுதந்திரத் தையும் இழிவு படுத்தி, பெண்ணை விலைப் பொருளாக்கும் சீதனக் கொடுமைக்கு எதிரா கப் போராடுவது.

6. பெண்கள் எதிர்கொள்ளும் பல்வேறு பிரச் சினைகள் குறித்து 'பெண்கள் மத்தியில் சமூக, அரசியல் விழிப்புணர்வைத் தோற்று விக்க உழைப்பது.

7. எமது விடுதலை இயக்கத்தினதும் மகளிர் முன்னணியினதும் வழிகாட்டலின் கீழ் தமிழீழப் பெண்ணினத்தை அணி திரட்டி, அரசியல்மயப்படுத்தி, தேசிய விடுதலைக் காகவும் சமூக விடுதலைக்காகவும் போராடு வது.

8. நிர்வாகத் திறன், கூட்டுழைப்பு, தலைமைத் துவம் போன்ற ஆளுமைப் பண்புகளை மகளிர் மத்தியில் வளர்த்துவிட உழைப்பது.

9. அடக்குமுறை, சுரண்டல்முறை, மற்றும் சமூக அநீதிகளுக்கு எதிராகப் போர்க் கொடி உயர்த்தி வரும் உலகப் பெண்ணி னத்துக்கு, ஆதரவு வழங்குவது.

10. உலகெங்குமுள்ள முற்போக்கான மகளிர் அமைப்புகளுடன் தொடர்பை ஏற்படுத்தி, நட்புறவை வளர்ப்பது.

## வேலைத் திட்டங்கள்

1. பெண்களின் சுதந்திரம், தனித்துவம், சுயா தீனமான பொருளாதார வாழ்வு ஆகிய வற்றைப் பேணி வளர்ப்பதும், அவர்களது வாழ்க்கை நிலையை மேம்படுத்துவது மான பொருளாதாரத் திட்டங்களை அமைத்து, அவற்றைப் படிப்படியாக விரி வாக்கம் செய்தல்.

2. பெண் ஆய்வு நிறுவனம் ஒன்றை அமைத்து, பெண்கள் எதிர்கொள்ளும் பிரத்தியேகப் பிரச்சினைகள் குறித்து விஞ்ஞான ரீதியான ஆய்வுகளை மேற்கொள்ளுதல்; இந்த ஆய்வுக் கண்டுபிடிப்புகளின் அடிப்படையில் சில வேலைத்திட்டங்களை உருவாக்கிச் செயற்படுதல்.

3. ஆணாதிக்க வன்முறை, பாலியல் வன் முறை மற்றும் அநீதிகள், கொடுமைகளால் பாதிக்கப்பட்ட பெண்களுக்கு உதவியளிக் கும் நோக்குடன் மகளிர் நலன்புரி மன்றங் களை நிறுவுதல்.

4. சமுதாயத்தில் நிலவும் சுகாதார சமூகப் பிரச்சினைகளை கிராமிய மட்டத்தில் எதிர் கொள்ளும் நோக்கில், சுகாதார சமூகத் தொண்டர்களை உருவாக்குதல். இந்தத் தொண்டர்களுக்கு நோய்தடுப்பு சுகாதாரம், குழந்தை வளர்ப்பு போன்ற விடயம் பற்றிப் பயிற்சி அளிப்பதற்காக, சுகாதார சமூக சேவைப் பயிற்சி நிலையம் ஒன்றை அமைத் தல்.

5. பெண்களின் கல்வி வளர்ச்சியை நோக்காகக் கொண்டு வளர்ந்தோர் கல்வித் திட்டம் ஒன்றை உருவாக்குதல். பாடசாலை, கல் லூரி நிர்வாகத்தின் ஒத்துழைப்புடன் இத் திட்டத்தை அமுலாக்குதல்.

6. சீதனக்கொடுமையை ஒழிப்பதற்கும், சீதனம் வழங்கித் திருமணம் செய்யும் முறையைத் தடுப்பதற்கும் சட்ட நடவடிக்கைகளை மேற்கொள்ளுதல்.

7. பெண்களை இழிவுபடுத்தும் பழைமைவாதச் சித்தாந்தங்கள், கண்ணோட்டங்களுக்கு எதி ராகத் தீவிரமான பிரச்சாரப் போராட் டத்தை மேற்கொள்ளுதல்.

8. இன ஒடுக்குமுறையாலும் யுத்தங்களினா

லும் பாதிக்கப்பட்ட பெண்கள், விதவைகள், ஆதரவற்றோரின் வாழ்க்கை நிலையை மேம்படுத்தும் வகையில் பொருளாதார வேலைத் திட்டங்களை அமைத்துச் செயற்படுதல்.

இதனையடுத்து பிரதித் தலைவர் கோ. மகேந்திரராசா சிறப்புரையாற்றினார். அவர் தனது உரையை இவ்வாறு ஆற்றத் தொடங்கினார்.

> " மிகவும் நெருக்கடியான சூழ்நிலையிலும் அனைத்துலகப் பெண்கள் நாளை சிறப்புடன் கொண்டாடுவதற்காக எழுச்சியுடனும் உறுதியுடனும் கூடியிருக்கின்ற உங்களுக்கு, முதலில் எனது மகிழ்ச்சியையும், வணக்கத்தையும் தெரிவித்துக்கொள்கிறேன். "

தொடர்ந்து உரையாற்றும்போது,

> " பெண்ணடிமைத்தனம், பெண்ணொடுக்குமுறை என்பன உலகளாவிய அளவில் அழித்தொழிக்கப்பட வேண்டிய சக்திகளாகும். பெண்களுக்கான விடுதலை என்பதும் பெண்ணுரிமை என்பதும் அவற்றின் இலக்கு நோக்கிய பாதையில் பெண்களின் எழுச்சிப் பயணத்தின்மூலம் தான் பெறமுடியும். "

என்றார்.

பிரதித் தலைவரின் உரையையடுத்து தேசியப் பிரச்சினையை ஒட்டியதும், சமூக ஒடுக்குமுறை சம்பந்தமானதுமான தீர்மானங்கள் பத்து நிறைவேற்றப்பட்டன.

1. தமிழீழ மக்களின் தாயகப் பூமியினது பூகோள ஒருமைப்பாடும் பிரதேசத் தனித்துவமும் பேணிப் பாதுகாக்கப்பட வேண்டும்.

2. தமிழீழ மக்களின் தேசிய தன்னாட்சி உரிமை அங்கீகரிக்கப்பட வேண்டும்.

3. எமது தலைவர்களுக்கு எதிராகவும், எமது விடுதலை இயக்கத்துக்கு எதிராகவும் திட்டமிட்ட வகையில் மேற்கொள்ளப்பட்டு வரும் அபாண்டமான விஷமப் பிரச்சாரங்களை இந்திய, தமிழ்நாடு அரசுகள் நிறுத்திக்



கொள்வதுடன், தமிழகச் சிறைகளில் வதைகளுக்கு உள்ளாகிவரும் எமது போராளிகளை விடுதலை செய்யவேண்டும்.

4. தமிழகத்தில் தஞ்சம் புகுந்த தமிழீழ அகதிகளை வலுக்கட்டாயமாகத் திருப்பி அனுப்புவதை, இந்திய அரசு நிறுத்த வேண்டும்.

5. தமிழீழத் தாயகத்தில் மேற்கொள்ளப்பட்டு வரும் இராணுவ ஆக்கிரமிப்பு நடவடிக்கைகளையும், தமிழீழ மக்களுக்கு எதிரான பொருளாதாரத் தடைகளையும், சிறீலங்கா அரசு உடன் நிறுத்திக்கொள்ள வேண்டும்.

6. தமிழீழப் பெண்ணினத்துக்கு எதிராகப் பிரயோகிக்கப்படும் சகல ஒடுக்குமுறை வடிவங்களும் ஒழிக்கப்பட வேண்டும்.

7. தமிழீழப் பெண்களுக்கு எதிராகக் கட்டவிழ்த்து விடப்படும் சகல வன்முறைக் கொடுமைகளும், உடன் நிறுத்தப்பட வேண்டும்.

8. சீதனக் கொடுமை ஒழிக்கப்படவேண்டும் இதனை ஒழிப்பதற்கு ஆக்கபூர்வமான நடவடிக்கைகள் எடுக்கப்படவேண்டும்.

9. பொருளாதாரத் தங்கு நிலையிலிருந்து பெண்கள் விடுவிக்கப்பட வேண்டும்.

10. பெண்களை இழிவுபடுத்தும் பழமைவாத,

பிற்போக்குவாத சித்தாந்தங்கள், கருத்துருவங்கள், கண்ணோட்டங்களுக்கு எதிராகத் தீவிரமானபிரச்சாரப் போராட்டம் மேற்கொள்ளப்பட வேண்டும்.

இறுதியாக விடுதலைப் புலிகள் மகளிர் முன்னணிப் பொறுப்பாளர் செல்வி ஜெயா,

"தேசிய விடுதலைப் போரில் இணைந்த பெண் போராளிகளாகிய நாம் இதில் இணைந்த பின்னர்தான், பெண்மீதான தேசிய, சமூக அழுத்தங்களை இனம் கண்டு கொண்டோம். நாம் விழித்துக் கொண்டால் மட்டும் போதாது, எமது தமிழீழப் பெண்கள் யாவருமே இதனைப் புரிந்து கொண்டு எழுந்திட வேண்டும் என்று எண்ணினோம். எமது எண்ணமே எமது, தலைவரின் கருத்தாக இருந்ததால் உருவான மகளிர் முன்னணியினூடாக அனைத்துப் பெண்களையும் அணி திரட்டி, பெண்மீதான ஒடுக்குமுறைகளுக்கெதிராகப் போராடி, பெண்களின் விடுதலையை வென்றெடுக்கலாம் என்பதில் உறுதியான நம்பிக்கையுடன் இருக்கின்றோம்.



பெண்கள் தமது உரிமையை நிலைநாட்டிக்கொள்ள வேண்டுமாயின், பெண்களே போராட வேண்டும் என்பதில் உறுதியாக உள்ளவர் எமது தலைவர். அவரின் தலைமையின் கீழ், அவரின் வழிகாட்டலில்தான் நாம் தேசிய, சமூக ஒடுக்குமுறைகளுக்கெதிராகப் போராடி வருகின்றோம்.

இப்படிப்பட்ட தலைவரின் தலைமையில் போராட்டத்தை முன்னெடுக்கும் விடுதலைப்புலிகள் மகளிர் பிரிவினருடன் அனைத்துத் தமிழீழப் பெண்களும் இணைந்து செயலாற்றினால், பெண்ணினத்தின் விடுதலை வென்றெடுக்கப்படுவது நிச்சயம்'' என்றார்.

இதனைத் தொடர்ந்து, அனைத்துலக மகளிர் நாளையொட்டி தலைவர் வே. பிரபாகரன் அனுப்பிய ஆசிச் செய்தி அறிக்கையை செல்வி ஜெயா வாசித்தார். இத்துடன், அனைத்துலக மகளிர் நாளையொட்டி விடுதலைப் புலிகள் மகளிர் முன்னணியால் ஒழுங்கு செய்யப்பட்ட தேசிய மாநாடு நிறைவுற்றது.

பி. ப. 2.00 மணியின் பின் மகளிர் பேரணி ஆரம்பமாகியது. தமிழீழத்தின் சகல மாவட்டங்களிலிருந்தும் உழைப்பாளிப் பெண்கள், மாணவிகள், குடும்பப் பெண்கள், உத்தியோகம் பார்க்கும் பெண்கள் என்று சகல தரப்புப், பெண்களுமாக சுமார் இருபதினாயிரத்திற்கும் மேற்பட்ட பெண்கள், இப் பேரணியில் கலந்து கொண்டனர். இரண்டாயிரத்திற்கும் மேற்பட்ட ஆண்களும் இப்பேரணியில் கலந்து கொண்டமை குறிப்பிடத்தக்கது.

இக்கட்டான சூழ்நிலையிலும் தமிழீழத்தின் அனைத்து மாவட்டங்களிலிருந்தும் பெண்கள் வந்து மாநாட்டில் கலந்துகொண்டு, பெண்கள் எதிர்நோக்கும் பிரச்சினைகளைப் பற்றிக் கலந்துரையாடியதோடு, அதற்கான தீர்வுகள் சம்பந்தமாக தமது ஆக்கபூர்வமான கருத்துக்களைத் தெரிவித்தமை, தமிழீழத்துப் பெண்கள் மத்தியில் விழிப்புணர்வு ஏற்பட்டு வருகிறது என்பதை வெளிப்படுத்தியது. தொடர்ந்து பேரணியில் பெண்கள் பெருந்திரளாகக் கலந்துகொண்டமை தம்மீது கட்டவிழ்த்துவிடப்பட்ட அனைத்து ஒடுக்குமுறை வடிவங்களையும் பெண்கள் புரிந்துகொண்டு, அதற்கெதிராகப் போராடத் துணிந்துள்ளார்கள் என்பதைத் தெளிவாக்கியது.

தமிழீழத்தைப் பொறுத்தவரை பெண்களின் விழிப்பும், விழிப்பினூடாக உருவான கருத்துக்களும், அடக்குமுறைக்கெதிரான பேரணியில் பெருந்திரளாகப் பெண்கள் இணைந்து கொண்டமையும், உண்மையான பெண்விடுதலைக்கு உரமூட்டுபவை. இந்தக் கருத்துக்களின் தோற்றத்திற்கும், தெளிவான புரிந்து கொள்ளலுடன் அணிதிரண்டமைக்கும், வழிசமைத்துக் கொடுத்தது தமிழீழ விடுதலைப் போராட்டமாகும். பெண் விடுதலையில் உண்மையான அக்கறை கொண்டுள்ள தலைவரின் வழிநடத்தலில் தமிழீழப் பெண்களை அணிதிரட்டி, தேசிய விடுதலைக்காகவும் போராடும் விடுதலைப்புலிகள் மகளிர் முன்னணி, தனது பணியை உறுதியுடன் தொடரமுடியும் என்ற நம்பிக்கையை இம்மாநாடும் மகளிர் பேரணியும் ஏற்படுத்தியுள்ளது.

# திருத்திய

சீதனம்
என்றதொரு சொல்லினால்
ஆசையாய், அவசரமாய்
மனசுக்குள் தயாரித்த மணமாலை,
மணக்கும் வெறும்
பூஜ்ஜியமாய்ப் போனது.
கற்பனையில் பவனி வந்த
பல்லக்குப் பாடையாய் ஆனது.
எமக்கு
மலர் என்ற வர்ணனை
ஒரு காலத்தில் இருந்ததாம்.
கூந்தலில் சேராமல்,
பிறர் கழுத்தையும் சுற்றாமல்,
பிணத்திற்கும் ஆகாமல்
அன்று நாம்
ஓரமாய் உதிர்ந்து போனது
அதனால் தானோ?

எம் உள்ளத்தின்
உள் ஈரங்களை
உணர்ந்து நனைய,
நனைந்து மகிழ,
முடிந்தும் முடியாமல்
நடைபயிலும் நளினங்கள்
சூரியனை வரைய — எம்
காயங்களில்
வர்ணம் தேடும் வக்கிரங்கள்
மதி என்று பெயர் சூட்டி
அன்றெம்மை அழைத்ததாம்.
பாலை வன உப்போடையில்
விழலுக்கு — எறிக்கின்ற
நிலவாக — அன்று
வீணே காய்ந்துவிட்டது
அதனால் தானோ?

பண்பாடு
என்ற பழம் புகழை
இழுத்துப் போர்த்திக்கொண்டு,
தூங்கி எழுந்து,
விடுதலை வேண்டி,
விரித்து நீட்டப்பட்ட — எம்
கைகளில் இடப்பட்ட
குரூரமான பிச்சை......
" அடிமை விலங்கு "
ஆதிக்க
சாம்ராஜ்ஜியத்தின்
சிம்மாசனத்திற்கு — எம்
அப்பாவி எலும்புக் கூடுகள்
கால்களாகி
தேய்ந்தது போதும்.
கண்ணீரால்
எழுதப்பட்ட — எம்
கறுப்புக் கதை — இனி
திருத்திய பதிப்பாகி
அச்சேறும்.



ரூபி மார்கிரப்

---

அனைத்துலகப் பெண்கள் நாளையொட்டி விடுதலைப் புலிகள் மகளிர் முன்னணியால் நடாத்தப்பட்ட இலக்கியப் போட்டியில் முதலாமிடத்தைப் பெற்ற கவிதை இது.

---

போதும்.
மேய்ச்சல் நிலங்களாகவே
இருந்து அலுத்துப் போச்சு.
நாமும் விளை நிலங்களாய்
மாற வேண்டும்.
அடிபட்டு அடிபட்டே
கன்றிப் போன காயத்திற்கு
களிம்பு தடவும் காரியமல்ல.
எம் நிரந்தர ரணங்களின்மேல் ஒட்டும்
ஈக்களை ஒட்டும்
முயற்சிகள் தான் — எம்
தோள் மேல் துப்பாக்கிகள்.
எம் அடிமை
விலங்குடைக்க
பாரதியும் வேண்டாம்;
கம்பனும் வேண்டாம்.
துப்பாக்கித் திறப்புக்களால்
நாமே — இனி
இலகுவாய் திறந்து கொள்வோம்.

# பதிப்பு

அனைத்துலகப் பெண்கள் நாளையொட்டி விடுதலைப் புலிகள் மகளிர் முன்னணியால் நடாத்தப்பட்ட ஓவியக் கண்காட்சிக்கான ஓவியங்கள் மார்ச் 6ம், 7ம், 8ம் திகதிகளில் கொக்குவில் இந்துக்கல்லூரியில் பார்வைக்கு வைக்கப்பட்டிருந்தன. அதில் பெண் ஒடுக்கு முறை, பெண்ணின எழுச்சி, தேசிய விடுதலைப் போரில் பெண்களின் பங்கு, இன்றைய பெண்களின் நிலை எனப் பல்வேறு வகைப்பட்ட ஓவியங்கள் காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தன. வளரும் எண்ணம் கொண்டு ஓவியங்களை வரைவதில் ஈடுபட்டுள்ள பல இளம் ஓவியர்களின் ஆர்வமான கைவேலைகளாகவே பெரும்பாலான ஓவியங்கள் காணப்பட்டன.

மும் முள் வேலியாக நிற்க, வேலியினுள்ளே சிக்குண்டு கிழிந்த உடைகளையும், வறிய கண்களையும் கொண்ட பெண்கள் வேலிக்கு வெளியே நடக்கும் ஆடம்பரமான திருமணம் ஒன்றை வெறித்துப் பார்க்கின்றனர். வேலி தாண்ட முடியாத அந்த வெள்ளை உள்ளங்களின் வேதனை இரைச்சல் எமக்கும் கேட்கின்றது. நெஞ்சத்தை அடைக்கின்றது.

சுமையின் தாக்கத்தால் தான் பெற்ற பெண் குழந்தையையே கழுத்தை நெரித்துக் கொல்லும் தாய், ஸ்ரீலங்கா இராணுவத்தினரின் பாலியல் வன்முறைக்காளாகி நிற்கும் பெண்கள், அழிக்க நினைக்கும் பூச்சிகளையும், பேய்களையும் தரை

# புதிய பரிசோதனைகள்

கலைநயம், தரம், இசைவான நிறச்சேர்க்கை, நுணுக்கம் என்ற அளவு கோல் கொண்டு இவற்றைப் பார்ப்போமானால் இரண்டு அல்லது மூன்று ஓவியங்களை மட்டும் தான் குறிப்பிட்டுச் சொல்லலாம். ஈழத்து வளரும் தலை முறையின் முயற்சிகள் என்ற பார்வையில் பார்க்கும்போது பெரும்பாலானவை ஓவியம் என்ற தரத்துடன் உள்ளன. பார்வையாளனின் இதயத்தோடு பேசி அவர்களுக்குள் சிந்தனைத் தாக்கத்தை விளைவிக்கக் கூடியன இந்த ஓவியங்கள். கல்வித் தடை, சீதனக் கொடுமை, பாலியல் வன்முறைகள், பொருளாதாரத் தடைகள், மறுமண மறுப்பு, சுமை தாங்கி நிற்கும் சிற்றடிமை நிலை போன்ற பெண்களுக்கெதிரான ஒடுக்கு முறைகள் பலவும் ஒவ்வொரு ஓவியங்களின் பொருளாகக் கையாளப்பட்டிருக்கின்றன.

வெளிநாட்டு டொலர்களும் வெள்ளிப் பண

யிலே தேய்க்கும் பெண்கள் ஆயுதமேந்திய பெண்கள், குழந்தைகள் பெறும் தொழிற்சாலையல்லவெனக் குமுறி எழும் பெண்கள்... இவ்வாறு பெண்கள்மீதான அடக்கு முறையிலிருந்து அவர்களது எழுச்சி வரை ஏறத்தாழ தமிழீழப் பெண்களை முழுமையாகப் படம் பிடித்துக் காட்டும் வகையில் ஓவியங்கள் உருவாக்கப்பட்டிருந்தன.

ஏறத்தாழ 125 ஓவியங்கள் காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தன; இந்த ஓவியங்கள் கலை ஆழமும், அழகு நயமும், நுணுக்கமும் உடையனவா என்பதல்ல இங்கு முக்கியம். இதுவரை மறைந்தோ, மறைக்கப்பட்டோ இருந்த புதிய கலைமுறையின் 125 புதிய பரிசோதனை முயற்சிகளாகவே நாம் இவற்றைப் பார்க்கலாம். இவற்றிலெல்லாம் உருவ அமைப்பை விட உள்ளடக்கமே மேலோங்கி நிற்கின்றன.

# பெண்

அம்மாவின் கண்ணில் தெளிவாகப் படக்கூடியவிதமாய் அடுக்களை மேசை மேல் கடிதத்தை வைத்தாள் கீதா. அந்தக்கடிதத்தைப் பார்த்து விட்டு அம்மா கதறப் போகின்ற கதறலையும், துடிக்கப்போகின்ற துடிப்பையும் கற்பனை செய்து பார்த்தபோது தன்மேலேயே ஆத்திரம் ஏற்பட்டது. அவளிற்கு. அம்மா இதைக் கொஞ்சம் கூட எதிர் பார்த்திருக்கமாட்டாள். அதைத் தாங்கிக் கொள்கின்ற சக்தி கூட அம்மாவிற்குக் கிடையாது என்பதை நினைத்துப் பார்த்த போது அம்மா மேல் பரிதாப உணர்வு எழுந்தது கீதாவிற்கு. ஆனாலும் அந்த நிர்ப்பந்தம் தவிர்க்க முடியாதது என்பதை அவள் உணர்ந்துதான் இருந்தாள்.

பெருமூச்செறிந்தபடி ஜன்னலினூடாக வெளியே வெறித்துப் பார்த்தாள் கீதா. தூரத்தில் நீர் நிரப்பிய வாளியை சுமக்க முடியாமல் சுமந்தபடி அம்மா எங்கோ போய்க்கொண்டிருந்தாள். அவளின் மெலிந்த உடலையும், உட்குவிந்த விழிகளையும் உற்றுப் பார்த்த போது அவளின் அண்ணன் சங்கரின் நினைவுகள் தான் அவள் அடி மனதில் எழுந்து கொண்டன.

சங்கர் இயக்கத்திற்குப் போன பின்னர் தான் அம்மா இப்படி எலும்பும், தோலுமாய் தரும்பாகிப் போனாள். அழுதழுது அவள் கண்கள் இடுக்கிப் போனதைத் தவிர வேறு பயனெதுவுமில்லை. துப்பாக்கி வேட்டுக்களும் குண்டுச் சத்தங்களும் கேட்கும் ஒவ்வொரு கணமும் அம்மா செத்துச் செத்துப் பிழைத்துக் கொண்டிருந்தாள் சங்கருக்கென்று அம்மா பிடிக்கும் விரதங்களையும் செய்யும் நேர்த்திக் கடன்களையும் நினைத்துப் பார்த்தாள் கீதா.



வேணி சின்னத்தம்பி

> '' பாவம் அம்மா..............இனி எனக்கும் சேத்து விரதம் பிடிப்பா............''

மனதினுள் மெதுவாகக் கூறிக் கொண்ட அவள் முற்றத்தை நோக்கித் திரும்பிப் பார்த்தாள். முற்றத்து வேப்ப மர நிழலில் கதிரை ஒன்றில் சாய்ந்தபடி அவள் தந்தை பரமசிவம் பத்திரிகை ஒன்றைப் படித்துக் கொண்டிருந்தார். அவர் பத்திரிகை படித்து முடிக்க இரண்டு மணித்தியாலமாவது எடுக்கும் என்பது கீதாவிற்குத் தெரியும். அந்தளவிற்குச் செய்திகளை எல்லாம் நுணுக்கமாகப் படிப்பார் அவர்.

நான்கு வருடத்திற்கு முன்னர் சங்கர் இயக்கத்திற்குப் போன போது அம்மா அழுதழுது கூறியது அவள் செவிகளில் மறுபடியும் ஒலித்தது ''உந்த மனிசன் வேலை இல்லாமல் பேப்பரைப் படிச்சு அரசியல் கதைச்சுக் கொண்டு இருந்ததால தான் அவனும் அதைப் பார்த்திட்டு இயக்கத்திற்குப் போனவன்.......'' அம்மா கூறியதில் தவறில்லை என்பதை கீதாவும் உணர்ந்து தான் இருந்தாள். அந்தளவிற்கு அவளின் அப்பா பரமசிவம் சுதந்திர வேட்கையும் தமிழ்ப்பற்றும் கொண்டவராகத்தான் இருந்தார்.

சங்கர் இயக்கத்திற்குப் போய் விட்டான் என்பதையறிந்து அம்மா புழுவாய்த் துடித்துக் கதறியழுத போது பரமசிவம் மட்டும் பெருமிதத்துடன் நடந்தார். ''என்ன நடந்திட்டுதெண்டு இப்ப செத்தவீடு கொண்டாடுறாய்? அவன் தன்ரை நாட்டைக் காக்கிறதுக்காய்ப் போராடப் போயிருக்கிறான். அவனைப் போல் நாட்டுப் பற்றுக் கொண்டவனைப் பிள்ளையாய்ப் பெற்றதுக்கு நீ சந்தோஷப்படவேணும்......''

பரமசிவம் அன்றைக்குக் கூறிய போது கீதா கூட அதிர்ந்து போனாள் தான். ஆயினும் சங்கர்

இயக்கத்திற்குப் போவதற்கு அப்பாவின் தூண்டுதல் தான் அதிகம் என்பதையும் அவள் உணராமலில்லை. சங்கர்போனதன் பின் பரமசிவத்தின் விடுதலை உணர்வுகள் கீதாவின் இதயத்திலும் விதையாய்ப் பரவிக் கொண்டது.மேடைகளிலும், கூட்டங்களிலும், பரமசிவத்தின் உணர்வுமயமான பேச்சுக்களைக் கேட்டு எத்தனையோ தடவைகள் மெய் சிலிர்த்திருக்கின்றாள் அவள். சங்கரினதும், பரமசிவத்தினதும் ஒன்றுபட்ட கொள்கைகளையும், இலட்சியங்களையும் செயற்படுத்த வேண்டுமென்ற உறுதியில் தான் இயக்கத்திற்குப் போவதற்குத் துணிந்து கொண்டாள் அவள்.

தூரத்தில் அம்மா மாடுகளுக்குத் தண்ணீர் வைத்து விட்டு அவை குடிப்பதையே ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டு நின்றாள். அம்மா வருவதற்கிடையில் அங்கிருந்து போய்விட வேண்டும் என்ற எண்ணத்தில் எழுந்த கீதா விரைவாக நடந்து முற்றத்தில் வந்தாள்.

கதிரையில் சாய்ந்தபடி பத்திரிகை படித்துக் கொண்டிருந்த பரமசிவத்தை பெருமிதத்துடன் உற்றுப் பார்த்தாள் அவள்.

"அப்பா நான் போட்டுவாறன்......" அதைக் கூறிய போது அவள் குரல் ஏதோ கரகரத்ததுடன் ஒருவித உறுதியும் அதில் கலந்திருந்தது,

"கவனமாய்ப் போட்டுவா" அவள் பாடசாலைக்குப் போகின்றாள் என்ற எண்ணத்தில் பரமசிவம் சாதாரணமாகவே கூறிவிட்டுப் பத்திரிகையைப் புரட்டினார்.

தூரத்தில் தெரிந்த அம்மாவின் மெலிந்த உருவத்தை ஒருகணம் வேதனையுடன் வெறித்துப் பார்த்து விட்டு மறுகணம் விரைவாக நடந்தாள் கீதா.

மாடுகளுக்குத் தண்ணீர் வைத்துவிட்டு வைக்கோலை அள்ளிப் போட்டுக் கொண்டிருந்த அம்மா அவசரமாக நடந்து போகும் கீதாவைத் திரும்பிப் பார்த்தாள். ஏதோ ஒரு முன் அவள் இதயத்தில் சட்டென உறுத்தியது. வேகமாக நடந்து வீட்டிற்குள் வந்தாள்அம்மா.

அடுக்களை மேசை மேல் கீதா எழுதி வைத்த கடிதம் காற்றில் படபடத்துக் கொண்டிருந்தது. அந்தக் கடிதத்தைப் பயத்துடன் வாசித்தபோது அம்மா அதிர்ந்து போனாள். சங்கரைப் போல கீதாவும் தன்னை ஏமாற்றி விட்டதை அறிந்து அந்தத் தோல்வியைத் தாங்கமாட்டாதவளாய் விம்மிவிம்மி அழுதாள் அவள்.

கதிரையில் சாய்ந்தபடி பத்திரிகையை படித்துக் கொண்டிருந்த பரமசிவத்திடம் கீதாவின் கடிதத்தைக் கொடுத்தபோது அவள் இதயத்தில் ஏதோ வெறுப்புணர்வு எழுந்து படிந்தது.

'உந்தப் பேப்பரைப் படிச்சுப் படிச்சு ஒருத்தனைப் போராட்டத்திற்கு அனுப்பினதோட விடாமல் பெட்டையையும் அனுப்பிப் போட்டார்.........................'

அந்த உண்மையை நினைத்துப் பார்த்தபோது பரமசிவத்தின் மேல் அடக்கமுடியாத ஆத்திரம் அவளுள் எழுந்தது. தன் இயலாமையை எண்ணி அவள் கண்ணீர்வடித்தபோது பரமசிவம் பத்திரிகையைப் போட்டுவிட்டுப் பதறியபடி எழுந்தார். என்றைக்குமில்லாமல் அவர் முகம் கோபத்தால் சிவந்து துடித்துக் கொண்டிருந்தது.

"என்ன வேலையெடி செய்திட்டாள் இவள் இப்படி வீட்டைவிட்டு இவள் வெளிக்கிடுவாள் எண்டு நான் நினைச்சுக்கூடப் பாக்கேலை-

இவ்வளவு காலமும் மானம் மரியாதையோடை திரிஞ்ச என்னை மற்றவையின்ரை முகத்திலை முழிக்காமல் செய்து போட்டாள். இப்படி ஒரு தலைக்குனிவு எனக்கு வருமெண்டு நான் கனவிலை கூடக் காணயில்ல.............................."

பரமசிவம் கோபத்தால் படபடத்தபடி உரத்துக் கத்தினார். அவரின் ஆத்திரத்தையும் கோபத்தையும்கண்டு கன்னங்களில் வழிந்த கண்ணீரைக் கூட துடைக்க மறந்துபோய் சிலையென நின்றாள் அம்மா.

பரமசிவம் அம்மாவை வெறித்துப் பார்த்தபடி கதிரையில் அமர்ந்தார். கீதாவின் கடிதத்தையே சொற்ப நேரம் உற்றுப் பார்த்தவர் ஏதோ ஒரு தெளிவான உறுதியான முடிவுடன் அம்மாவை நோக்கி நிமிர்ந்தார். "என்னத்துக்குப் பேசாமல் நிக்கிறாய் அழு, உன்ரை ஆத்திரம் தீருமட்டும் அழு ஏனெண்டால் இண்டையோட உன்ரை மகள் செத்துப்போனாள். என்ரை கட்டுப்பாடுகளை மீறி எண்டைக்கு அவள் இந்த வீட்டைவிட்டு வெளிக்கிட்டாளோ அண்டையோட அவள் என்னைப் பொறுத்தவரை செத்திட்டாள்......" பரமசிவம் சாதாரணமாகக் கூறிவிட்டு மறுபடியும் பத்திரிகையை எடுத்துப் புரட்டத் தொடங்கினார்.

அனைத்துலகப் பெண்கள் நாளையொட்டி விடுதலைப் புலிகள் மகளிர் முன்னணியால் நடாத்தப்பட்ட இலக்கியப் போட்டியில் முதலாமிடத்தைப் பெற்ற சிறு கதை இது.

# சமகால  கண்ணோட்டம்

அண்மையில் பரபரப்பான பத்திரிகைச் செய்தி ஒன்று, யாழ்நகரின் இரண்டாம் குறுக்குத்தெருவில் இடிந்த கட்டடங்களின் நடுவே குழந்தையொன்று அநாதரவாகக் கிடத்தப்பட்டிருந்ததாகவும் இந்நிகழ்வோடு சம்பந்தப்பட்டவர் என்று சந்தேகிக்கப்பட்ட பெண் ஒருவரும் அக்குழந்தையும் பின்பு பொதுமக்களால் காவல்துறையிடம் ஒப்படைக்கப்பட்டனர் என்பதுமாகும்.

காவல்துறையிடம் அப்பெண்மணி உண்மையை ஒத்துக்கொண்ட பொழுது காவல்துறை அப்பெண்மணியையும் குழந்தையையும் மகளிர் நீதி நிர்வாகப் பிரிவிடம் ஒப்படைத்தது. மகளிர் நீதி நிர்வாகப் பிரிவு தாய்க்கும் குழந்தைக்குமுரிய பராமரிப்பை வழங்குவதற்குரிய ஏற்பாடுகளைச் செய்துகொண்டு இத்தாயினுடைய அசாதாரண முடிவுக்குக் காரணங்களை ஆராய்ந்தது.

ஏற்கனவே நாலு பிள்ளைகளின் தாயாக இருக்கும் இவர் ஏறைக்குறைய ஐந்து வருடங்களுக்கு மேலாக கணவனைப் பிரிந்து வாழ்கிறார். தனது முதல் மூன்று பிள்ளைகளையும் பராமரிக்க முடியாத நிலையில் மதஸ்தாபனங்களிடம் ஒப்படைத்திருந்தார் தான் வளர்த்து வந்த கடைசிப் பிள்ளையையும் தனக்கு அறிந்த நம்பிக்கையான ஒரு குடும்பத்திடம் அண்மையில் ஒப்படைத்து விட்டார்.

இப்பொழுது ஒரு குழந்தையை மடியில் வைத்திருக்கிறார். ஆறாகப் பெருகும் அன்னையின் கண்ணீரில் அக்குழந்தை குளித்துக்கொண்டிருக்கிறது. ஏனெனில் அக்குழந்தையினுடைய தந்தையை அவள் மட்டும் தான் அறிவாள். உலகம் அறியாது. ஊருக்குச் சொல்லவும் அவள் வெட்கப்படுகிறாள். சொன்னாலும் உலகறிய அவன் அவளை ஏற்றுக்கொள்ள முன்வரப்போவதில்லை.

தந்தை பெயர் அறியாத அப்பிள்ளை தாய் பெயரையும் அறியாமல் எங்கோ வளரட்டும் என்று நினைத்தாள் போலும் அப்பெண்?

மேற்குறிப்பிட்டது ஒருபெண்ணினுடையகதை. இதேபோன்று படுகுழிக்குள் வீழ்ந்துவிட்ட பல பெண்களுடைய கதைகளை நாமறிவோம். அவர்கள் எடுத்த முடிவுகளோ இதை விடக் கோரமானவை. அதாவது அந்தத் தாயினுடைய உதிரம் தான் அந்தக் குழந்தைக்கு உயிர் கொடுத்தது. அவளினுடைய இதயம் துடிக்காவிட்டால் அந்தச் சிசுவின் இதயம் துடித்திருக்கமாட்டாது. அதற்கு இதயத்துடிப்பு வந்ததே இவளால் தான். ஆனால் குழந்தை பிறந்ததும் இதயமே இல்லாமல் அப்பெண் சிசுவின் குரல்வளையை நசித்துக் கொன்று விடுகிறாள்.

இந்த நிகழ்வும் எமது மண்ணில் நடந்து கொண்டுதான் இருக்கிறது. பெண்களுடைய இந்த அவலவாழ்வு தொடர்ந்து கொண்டுதான் இருக்கிறது.

இதுவரையில் அரசு சார்ந்தோ, அரசு சார்பற்றோ பெண் விடுதலை பேசுகின்ற அமைப்புகள் ஆண் பெண் சமத்துவம், ஜனநாயகம் பேசுகின்ற அமைப்புகள் எதுவும் பொருளாதார சமூகவாழ்வில் அடிமட்டத்தில் வாழும் பெண்களின் இப்பிரச்சினையை ஆராய்ந்தது கிடையாது. ஆராய முற்பட்டதுமில்லை.

மேற்கண்டவாறு பாதிப்புக்குள்ளான பெண்கள் பல மட்டங்களில் உள்ளனர்.

1. திருமணத்துக்கு முன்பாகவே இத்தகைய பாதிப்புக்குள்ளாகியவர்கள்
2. திருமணவாழ்வு முடிவடைந்த பின்பு இத்தகைய பாதிப்புக்குள்ளாகியவர்கள்.
3. கணவர் தூரதேசம் சென்று நீண்டகாலம் பிரிந்து வாழும் நிலைக்காளானவர்கள்.

மேலெழுந்தவாரியாகப் பார்க்கும் போது சாதியம், சீதனம் போன்ற பேய்கள் திருமண வாழ்வில் குறுக்கிடுதல் பெண்களின் இவ் அவல நிலைக்குக் காரணம் போல் தெரியலாம். இவை உண்மையானதே ஆயினும் இவற்றுக்கும் மேலாக குடும்ப வாழ்வைச் சிதைத்துச் சின்னாபின்னப் படுத்துகின்ற இன்னொரு விடயம் இருப்பதை நன்கு ஆழமாகப் பார்க்கின்ற பொழுது நாம் தெரிந்து கொள்ள முடியும்.

சாதியம், சீதனம் என்பவற்றின் குறுக்கீடுகளை உடைத்துக்கொண்டு திருமணம் செய்து

கொண்ட தம்பதிகளும் இவற்றின் குறுக்கீடுகள் இன்றி சாதாரணமாகத் திருமணம் செய்து கொண்ட தம்பதிகளும் கூட குடும்ப வாழ்வு சிதைந்த நிலையில் நடுத்தெருவில் நிற்பதையும் இங்கு நாங்கள் ஆராய்ந்து கொண்டிருக்கின்ற சிசு அழிப்பு நடவடிக்கையில் மேற்கண்ட குடும்ப வாழ்வு சிதைக்கப்பட்ட பெண்கள் ஈடுபட்டிருப் பதையும் நாம் காணக்கூடியதாகவுள்ளது.

எனவே குடும்பவாழ்வில் பங்கேற்கின்ற ஆண், பெண் உறவு நிலை என்பது சமூகமட்டத்திலும் குடும்ப மட்டத்திலும் இங்கு ஆராயப்படவேண்டிய ஒன்றாகவுள்ளது.

மனித நாகரிக வளர்ச்சியில் ஆண் பெண் குடும்ப உறவு, குடும்ப அமைப்பு என்பதும், காதல் ஒழுக்கம் என்பதும் மிக உன்னத இடத்தைப் பிடித் திருந்தாலும் நடைமுறையில் இதுவரை காலமும் குடும்ப அமைப்பில் பெண் என்பவள் ஒரு அடிமைப் பாத்திரத்தையே வகித்து வந்திருக்கிறாள். குடும்ப அமைப்பென்பது ஆணினுடைய அதிகார உறவின் அடித்தளத்தில் கட்டப்பட்டிருந்தது "கல்லானாலும் கணவன் புல்லானாலும் புருஷன்" போன்ற பழைய சித்தாந்தங்கள் பெண்களைக் கட்டிப்போட் டிருந்தன.

காலமாற்றம் பெண்ணடக்குமுறை இறுக்கத்தில் மெதுவாக வெடிப்புக்களை ஏற்படுத்தியது. நவீன காலத்தின் தேவை என்பது பெண்களின் வாழ்வு முறையை மாற்றியமைத்தது. பழைய சித்தாந்தங் களும் கோட்பாடுகளும் பெண்களை வழி நடத்த முடியாமல் போயின. இவற்றின் துணையோடு குடும்பத்தை நிர்வகித்து வந்த ஆணின் அதிகாரமும் அங்கே செயலற்றுப் போகிறது, இந்த நேரத்தில் குடும்ப அமைப்பு குடும்ப உறவு சிதைந்து சீர் குலைந்து போகாமல் இருப்பதற்கு குடும்பத்தை நிர்வகிப்பதற்கு அங்கே தேவையானது ஆண் பெண் இருவருக்கிடையிலான அன்பு உறவும் புரிந்துணர் வுமாகும்.

இந்த அன்பு உறவும் புரிந்துணர்வும் விருத்தி யடைவதற்கு வழியில்லாதவிடத்து குடும்ப உறவில் ஆழமான பிளவு, பிரிவு ஏற்பட்டு விடுகிறது இவ் வாறு குடும்ப அமைப்பு உடைந்து வெளியேறுகின்ற பெண்கள் தம்மைத் தற்காத்துக் கொள்வதற்குப் போதிய சமூக, விஞ்ஞான அறிவோ, மனித உள வியல் அறிவோ, ஆண் பெண் பாலுறவு சம்பந்த மான அறிவோ, சுயசார்பு பொருளாதார அடிப் படையோ இல்லாததால் ஆண்களிடம் ஏமாந்து விடுகிறார்கள். அநாகரிகமாக நடந்து கொள் கிறார்கள்.

பெண்களுடைய நிர்க்கதியான நிலைக்கு குடும்பத்தில் ஆணினுடைய பொறுப்பற்ற தன்மை யும் அக்கறையீனமும் எல்லை மீறிய அதிகார முமே காரணமாக இருப்பதுமல்லாமல், சமூக மட் டத்திலும் சமுதாய நலநோக்குடையவர்கள் அல் லாமலும் சுயநலமானவர்களாகவும், தப்பிச்செல்லும் மனோபாவம்உள்ளவர்களாகவும், நடந்துகொள்ளும் ஆண்களால் தான் மேலும் மேலும் பெண்கள் இன்ன லுக்குள்ளாகிறார்கள். இத்தகைய அநாகரிகமாக பிற்போக்குத்தனமாக நடந்துகொள்ளும் ஆண்களை சமூகம் நிச்சயமாக கண்டிக்கவோ, தண்டிக்கவோ தயங்கக்கூடாது. இதனைச் சமூகம் செய்யாது ஆணுக்குச் சார்பாக நடந்து கொள்கிற பொழுது சம்பந்தப்பட்ட பெண்களுக்கு நீதி கிடைப்பதில்லை. எனவே தமது அநாகரிக உறவை உலகிற்கு அம் பலப்படுத்தும் அவமானச் சின்னமாக தனக்கு கிடைத்த சிசுவை அவள் நினைக்கிறாள். அதனை அழிக்க முயல்கிறாள்.

இந்த அநாகரிகமான ஆண் பெண் உறவுகள் பெண்களின் அவலங்கள் என்பன மனித நாகரிகத் தில் உயர்ந்த குறிக்கோளை எய்தும் நோக்கில் அமைந்த குடும்ப அமைப்பு உடைவின் நேரடி விளை வுகள் எனக் கருதவே இடமுண்டு.

எனவே இத்தகைய பிற்போக்கு நிலையைக் களைய தமிழீழப் பிரஜைகள் ஒவ்வொருவருக்கும் கடப்பாடு உண்டு.

எமது தமிழீழக் குழந்தைகளின் சுபீட்சமான எதிர்காலத்துக்கு அடித்தளமிடும் குடும்ப உறவு பாது காக்கப்படவேண்டுமாயின் காலத்தின் தேவையை யும் பெண்களின் மன எழுச்சியையும் புரிந்து கொண்டு ஆதிக்க மனோபாவத்தைக் கைவிட்டு செயல்படுகின்ற அவசியம் ஆண்களுக்கு இருப்பதை மறுக்கமுடியாது.

ஆண் பெண் இருவரையும் பேதங்கள் காட்டி ஒன்றுக்கொன்று முரண்பட்ட சக்திகளாக வளர்த் தெடுக்காமல் ஒன்றோடு ஒன்று இணைந்து செல் லக்கூடிய வகையில் சம உரிமைஉடையவர்களாக, சம அந்தஸ்து உடையவர்களாக வளர்த்தெடுத்தல் சமூகத்தின் கடமையாக இருப்பதோடு இவ்வாறு பாதிப்புக்குள்ளான பெண்களினதும் அவர்களது குழந்தைகளினதும் வாழ்நிலையை உயர்த்துவதற்கு பாடுபட வேண்டியது சமுதாயத்தின் கடமையாகும்.

இச் சமூகம் பாரிய மாற்றத்தை வேண்டி நிற்கும் இக்காலகட்டத்தில் மாற்றத்தின் பாதையில் அடிஎடுத்து வைத்து விட்டு திசை தெரியாது படு குழிக்குள் வீழ்ந்து விட்ட பெண்களை சரியான திசைகாட்டி தம்மோடு அழைத்துச் செல்வது மட்டு மல்லாது பெண்களுக்கிழைக்கப்படும் சமூக அநீதி களுக்கெதிராகவும், அடக்குமுறைகளுக்கெதிராக வும் பெண்களே விழிப்புணர்வு பெற்றுக் கிளர்ந் தெழவேண்டும்; ஒன்றிணைந்து போராடவேண்டும்; ஒரு புதிய சமூக அடித்தளத்தை உருவாக்க நடந்து கொண்டிருக்கும் தமிழீழ விடுதலைப் போராட்டத்தோடு தம்மை இவர்கள் இணைத்துக் கொள்ள வேண்டும். இதுவே ஆண் பெண் சமத் துவத்தை நிறுவக்கூடிய நடைமுறைக்குச் சாத் தியமான பாதையாகும்.

முற்றும்

# அன்னையின் நினைவில்

எமது தமிழீழப் போராட்டமானது அளவற்ற அர்ப்பணிப்புகளும் தியாகங்களும் நிறைந்தது. ஆயிரக்கணக்கான இளைஞர், யுவதிகளின் உதிரத்தால் நகர்த்திச் செல்லப்படுவது. எமது தாயக விடுதலைப் போராட்டத்திற்கான தியாகங்களுள் அன்னை பூபதியின் தியாகம் மகத்தானது; வித்தியாசமானது; போற்றத்தக்கது.

ஒரு தாயாக, தனிமனித சக்தியாக மிகப் பெரிய வல்லரசை எதிர்க்கத் துணிந்தது. போராட முன்வந்தது தமிழீழப் பெண்ணினத்திற்கு மட்டுமல்லாது உலகப் பெண்ணினத்திற்கே பெருமை சேர்ப்பது; எல்லோரையும் வியக்கவைப்பது. உலகில் எந்த இடத்திலுமே நடந்திராத, எந்தப் பெண்ணுமே இது வரை சாதித்திராத தியாகம் அன்னையினுடையது.

ஒரு தனிமனித சக்தியாக அன்னை ஆரம்பித்த போராட்டம் உறங்கிக் கிடந்த எம்மக்களைத் தட்டி எழுப்பியது. திரண்ட ஒரு வெகுஜன சக்தியாக இந்தியாவிற்கெதிராகப் போராடும் வல்லமை கொண்ட சக்தியாக பரிணாமம் பெற்றது. தமிழீழ விடுதலைப் போராட்டம் புதிய வேகத்தினைப் பெற்றது.

19-04-1988
அன்னையின் போராட்டம்,

இலங்கை.இந்தியஒப்பந்தத்தைத் தொடர்ந்து எம்மண்ணில் கால்வைத்த இந்தியப் படைகள் தமது சுயரூபத்தைக் காட்டத் தொடங்கிய போது தமிழீழமே யுத்தகளமானது. அப்பாவி மக்களின் குருதி ஆறாய் ஓடியது எங்கும் மரண ஓலமும் ஈனக்குரலுமே ஒலித்தபடி தமிழீழம் மயானபூமியாகியது. கேட்பார் யாருமில்லாதது போல இந்தியப் படைகள் புரிந்த அனர்த்தங்களினால் ஆயிரக்கணக்கில் தமிழ் மக்கள் கொன்று குவிக்கப்பட்டுக் கொண்டிருந்தனர்.

இந்நிலையில் தான் மட்டக்களப்பில்,

19.03.1988 அன்று அன்னையர் முன்னணி சார்பாக திருமதி பூபதி கணபதிப்பிள்ளை அவர்கள் 'தமிழீழ மக்கள் மீதான யுத்தத்தை நிறுத்து, புலிகளுடன் நிபந்தனைஇன்றிப் பேச்சுவார்த்தை நடத்து' என்ற இரு கோரிக்கைகளையும் இந்திய அரசிடம் முன்வைத்து தாயாக, தனி ஒரு பெண்ணாக நின்று சாகும் வரை உண்ணாவிரதப் போராட்டத்தை ஆரம்பித்தார்.

தமிழீழ விடுதலைப் போராட்டமானது ஆண்கள், பெண்கள், பெரியவர்கள், சிறியவர்கள் என தமிழீழ மக்கள் அனைவருக்குமுரியது. இந்த வகையில் பெண்கள் என்று வீட்டுக்குள் ஒடுங்கி இருந்து விடாமல் நூற்றுக்கணக்கில் இளம் பெண்கள் பயிற்சி பெற்று ஆயுதமேந்தி களத்தில் போராடிக் கொண்டி

(23ஆம் பக்கம் பார்க்க)

தனது RPG யைத் தூக்கித் தோளில் வைத்துக் கொண்டு நிமிர்ந்தவாறு காட்டுப்பாதையால் நடக்கின்றாள். முன்னாலும் பல பெண் போராளிகள்...... பின்னாலும் பல பெண் போராளிகள்...... நீண்ட வரிசையில் அமைதியாக எங்கள் பயணம் தொடர்கிறது. காடு கூட, தன் இலைகள் சலசலத்தால் இவளையும் ஏனையோரையும் எதிரி உணர்ந்து விடுவான் என்று எண்ணியதால்தான் அமைதியாக இருக்கிறது போலிருக்கிறது.

ஒவ்வொரு போராளியினதும் முகத்தை உற்றுப் பார்க்கிறேன். எல்லாருடைய முகத்திலுமே எதிரியைத் தேடிப் பிடித்து அழிக்கும் ஆவலே தெரிந்தது. ஜீவமலரையும் பார்த்தேன். 'இந்த முறை வவுனியாவிலிருந்து சிங்கள இராணுவத்தை விரட்டி விடுவோம்' என்பதுபோல நடந்து கொண்டிருந்தாள்.

❋ ❋ ❋

ஜீவமலர் ஒரு சிறந்த பாடகி. "அம்மாவும் நீயே அப்பாவும் நீயே" இதுதான் அநேகமாக அவள்பாடுவது. எந்த நேரமுமே நகைச்சுவைப் பேச்சும் பாட்டுமாகத்தான் இருப்பாள், சினிமாப் பாடல் பாடுமாறு நாம் கேட்டபோது. சினிமாப்பாடல் கேட்கக் கூடாது, பாடக் கூடாது என்ற எமது இயக்க ஒழுங்குகளுக்கேற்ப மறுத்து விட்டாள். யாருடனும் இவள் சீறிச் சினப்பதில்லை. இவளது பயிற்சிப் பாசறையில் நன்றாகக் குறி பார்த்துச் சுடுபவர்களுள் இவளும் ஒருத்தி. 'என் பிள்ளைகள் வளர வேண்டும், நன்றாகப் பயிற்சி எடுக்க வேண்டும். நன்றாக எதிரியுடன் மோத வேண்டும். வெல்ல வேண்டும்', என்று எங்கள் தலைவர் எங்களைப் பற்றிக் காணும் கனவுகளையெல்லாம் நனவாக்க வேண்டும் என்பதில் ஆர்வம் உள்ளவள்.

❋ ❋ ❋

காட்டுக்குள் நகர்ந்து நாங்கள் எல்லோருமே ஒரு நிலை எடுத்து 7 நாட்களாகி விட்டன. இராணுவ நடமாட்டம் எதையுமே காணோம். 8 ஆம் நாள் பூவரசங்குளப் பிரதேச மக்கள் கையில் கிடைத்த உடைமைகளு



டன் சாரிசாரியாக வெளியேறிக் கொண்டிருந்தார்கள். அவர்களில் பலர், "படுபாவிகள் வாறாங்களாம்", என்று ஏசியவாறு போய்க் கொண்டிருந்தார்கள். இராணுவத்தினர் நகர்கிறார்கள் என்பதை மக்கள் மூலம் அறிந்து கொண்ட நாங்கள், எங்கள் ஒவ்வொருவருக்கு



முரிய இடங்களில் நிலை எடுத்தவாறு எதிரி வரவை எதிர் நோக்கிக் காத்திருந்தோம்.

❋ ❋ ❋

பயிற்சி முடிந்தகையுடனேயே கனரக ஆயுதம் தரப்பட்டதில் ஜீவமலருக்கு ஒரே சந்தோஷம். குழந்தையைப் போல் RPG யைத் தூக்கித் தோளில் போட்டுக் கொண்டு கம்பீரமாகப் பாடிப் பாடி நடப்பதைப் பார்க்கும் போது சந்தோஷமாக இருக்கும்.

❋ ❋ ❋

ஜீவமலரின் அப்பா கோயில்களில் பிரசங்கம் செய்பவர். அண்ணன் மிருதங்க வித்துவான். கலைக் குடும்பத்தில் பிறந்த ஜீவமலர் ஒரு நல்ல பாடகியாக இருப்பதில் எமக்கு ஆச்சரியம் ஏற்படவில்லை.

❋ ❋ ❋

சில நிமிட நேரத்தில் வீதியால் ஒரு பெரிய மாட்டுக் கூட்டம் வந்து கொண்டிருந்தது, மாடுதானே என்று நாங்கள் அலட்சியமாக இருந்தாலும், பின்னர் சிறு சந்தேகம் ஏற்பட்டது, இராணுவத்தினர் தான் மறைந்து வருகிறார்களோ என்று அறிவதற்காக ஜீவமலர், ஒரு கல்லை எடுத்து மாட்டுக் கூட்டத்துக்குள் எறிந்தாள், மாடுகள் வெருண்டு, கலைந்து ஓடத் தொடங்கின. மறைவதற்கு எதுவுமில்லாமல் நின்ற இராணுவத்தினரை நோக்கி எமது குழு சுட ஆரம்பித்தது. மோதல் நடந்து கொண்டிருந்த சமயத்தில் இராணுவத்தினருக்கு உதவியாக வந்த கவச வாகனங்களை நோக்கி ஜீவமலர் தனது RPG யை இயக்கினாள். கவச வாகனங்களில் ஒன்று அவளது தாக்குதலால் தகர்க்கப்பட்டது, எதிர்பாராத இந்தத் தாக்குதலினால் எதிரி நிலை குலைந்து ஓடினான். சிலர் அந்த இடத்திலேயே உயிர் பிரிந்தார்கள்.

எமது போராளிகளுள் காயப்பட்ட ஒருவரைத் தூக்கிக் கொண்டு, பாதுகாப்பான இடம் நோக்கிப் பின்வாங்கிக் கொண்டிருந்தாள் ஜீவமலர். காயமடைந்த அந்தப் போராளியை உரிய இடத்தில் ஒப்படைத்து விட்டு, மீண்டும் விரைவாகத் தன் நிலைக்குத் திரும்பி தன் RPG யால் முழு இராணுவத்தினரையும் அழிக்க வேண்டும் என்று சொல்லிச் சொல்லிக் கொண்டே வந்தாள்.

மீண்டும் எங்கள் நிலையை நோக்கி முன்னேறிச் செல்லுகையில் எதிரி எம்மீது ஷெல் தாக்குதலை ஆரம்பித்தான். நாங்கள் ஷெல்லுக்குப் பாதுகாப்பாக எம்மை மறைத்தவாறு முன்னேறிச் செல்லுகையில் ஜீவமலர் ஷெல்லால் தாக்கப்பட்டுக் கீழே விழுந்தாள்.

இம்முறை அவளை நான் தூக்கிக் கொண்டு பாதுகாப்பான இடம் நோக்கிப் பின் வாங்கிக் கொண்டிருந்தேன். ஜீவமலரை உரிய இடத்தில் ஒப்படைத்து விட்டு மீண்டும் முன்னே என் நிலைக்குச் சென்று எதிரியை விரட்டும் ஆவலுடன் விரைந்தேன். ஆனால் அவளைக் காப்பாற்ற முடியவில்லை.

---

பயம் மனித இலட்சியங்களின் அடியில் லேசாகக் குழிபறிக்கும் இயல்புடையது. நோயினால் சாகுமுன் பயத்தால் மனிதர்கள் செத்திருக்கிறார்கள். எதிரியால் தோற்கடிக்கப்படுமுன், வெறும் பயத்தால், படைகள் நாட்டைப் பறிகொடுத்திருக்கின்றன.

☆ தத்துவஞானி எமர்சன் கூறுகிறார், "எதைக்கண்டு பயப்படுகிறீர்களோ, அதைச் செய்யத் துவங்குங்கள். பயம் செத்துப் போவதைக் காண்பீர்கள்" என்று.

தண்ணீரைக் கண்டு பயப்படுபவன் குளத்திலிறங்கி நீந்தக் கற்றுக் கொள்ள வேண்டும். பின் நீரைப்பற்றிய பயம் போகும்.

*எம். எஸ். உதயமூர்த்தியின்*
*எண்ணம் என்ற கட்டுரைத் தொகுதியிலிருந்து*

# விடுதலை வேண்டி விரைந்து நடந்தவர்கள்

  

**1. 2ம் லெப் மங்களா**
தேவிகா அப்புத்துரை
தம்பிராய், பூநகரி.

வீரஜனனம்:- 19. 07. 1969
வீரச் சாவு:- 17. 02. 1992

சம்பவம்:- *வவுனியாவில் விளக்கு வைச்சகுளம் எனும் இடத்தில் பொம்பர் அடித்து வீரச்சாவு அடைந்தார்.*

**4. வீரவேங்கை மயிலினி**
ஜீவராணி சின்னத்தம்பி
சிறுப்பிட்டி தெற்கு, நீர்வேலி.

வீரஜனனம்:- 15. 07. 1973
வீரச்சாவு:- 28. 02. 1992

சம்பவம்:- *பழுதடைந்த நிலையிலிருந்த ஷெல்லை எடுத்துக் குத்தியபோது யாழ் கோட்டையில் வீரச்சாவை அடைந்தார்.*

   

**2. வீரவேங்கை கலாநிதி**
பாலமனோகரி குணசேகரம்
ஆழியவளை, தாளையடி.

வீரஜனனம்:- 11. 10. 1973
வீரச்சச்வு:- 17. 02. 1992

சம்பவம்:- *வவுனியாவில் விளக்கு வைச்சகுளம் எனும் இடத்தில் பொம்பர் அடித்து வீரச்சாவு அடைந்தார்.*

**5. வீரவேங்கை ஆண்டாள்**
யோகேஸ்வரி கந்தையா
ஆறுமுகந்தான், புதுக்குளம்,
வவுனியா.

வீரஜனனம்:- 23. 04. 1973
வீரச்சாவு:- 18. 03. 1992

சம்பவம்:- *மணலாறு விமானக்குண்டு வீச்சில்*

   

**3. வீரவேங்கை ஜானகி**
புவனேஸ்வரி எட்வின்
உதயநகர் மேற்கு,
வேங்கையன் வீதி, கிளிநொச்சி.

வீரஜனனம்:- 30. 10. 1974
வீரச் சாவு:- 17. 02. 1992

சம்பவம்:- *யாழ் வைத்தியசாலையில் சுகவீனம் காரணமாக வீரச்சாவை அடைந்தார்.*

**6. கப்டன் சிறீமதி**
சிவகலா துரைராஜசிங்கம்
ஒட்டுசுட்டான், முள்ளியவளை.

வீரஜனனம்:- 19. 12. 1970
வீரச்சாவு:- 23. 03. 1992

சம்பவம்:- *மணலாறு நேரடி மோதல்*

7. வீரவேங்கை மான்விழி
சிவகங்கை செல்வராஜா
அல்வாய் கிழக்கு, அல்வாய்.

வீரஜனனம்:- 15. 09. 1972
வீரச்சாவு:- 23. 03. 1992

சம்பவம்:- மணலாறு நேரடி மோதல்

8. வீரவேங்கை தர்சினி
வனிதா கந்தசாமி
வாழைச்சேனை, மட்டக்களப்பு.

வீரஜனனம்:- 04. 05. 1976
வீரச்சாவு:- 23. 03. 1992

சம்பவம்:- மணலாறு நேரடி மோதல்

மரணத்தின் பின்னும் வாழ்கின்ற மகத்தானவர்கள் தூங்குமிடமிது. மனித நேயம் மிக்கவரே......, ஒருகணம் மௌனம் அனுஷ்டியுங்கள். மானத்துக்காக வீழ்ந்தவர்கள் இங்கு புதையுண்டு கிடக்கின்றனர். தயவுசெய்து சத்தம் செய்து விடாதீர்கள். தமிழீழக் கனவோடு தூங்கிக் கொண்டிருப்பவர்களுக்கு அது இடையூறாகிப் போகலாம். வேண்டுமானால் வெடியோசைகளின் அதிர்வை இவ்விடத்தில் உங்களால் எழுப்ப முடியுமானால் எழுப்புங்கள். இன்னும் மகிழ்வாக, இனிமையான தாலாட்டில் தூங்கும் குழந்தைகள் போல் நிம்மதியாகத் தூங்குவார்கள்.

இவர்கள்.........

சிறையுடைப்புகளின் பின் சிறகை விரித்தவர்கள். சிந்தனைகளில் உயர்ந்து, சிறந்ததோர் தலைமையைத் தேர்ந்தெடுத்தவர்கள். இயலாதவர்களாகவே இருப்பதா எனக் கேட்டுப் பாசறை சேர்ந்தவர்கள். எதிரியை அழிக்கும் வீரப் போர்களில் வெற்றியைத் தந்துவிட்டு, இல்லாமல் போனவர்கள் இல்லாமல் போயும் எமக்குள் எல்லாமாய் இருப்பவர்கள். எங்களோடு, எங்களுயிரோடு இணைந்தவர்கள். உணர்வுக்குள் கலந்தவர்கள். ஒன்றாய் உண்டு, உறங்கி எழுந்தவர்கள். வெய்யில் கொழுத்தும் வெட்ட வெளிகளுடும், முட்கள் கிழிக்கின்ற இருண்ட பற்றைகளுடும், விடுதலை வேண்டி, விரைந்து நடந்தவர்கள். கனவுகள் மறந்து, கடமையை நினைந்து, களத்திடை சேர்ந்தவர்கள். இன்று காற்றிடை வாழ்பவர்கள். நித்திரை அற்றிருக்கும் நீண்ட இரவுகளில் சில வேளைகளில் மட்டும் உறவுகளை, ஊரை நினைத்துக் கதைப்பவர்கள். கனவிலும் எதிரியைக் கண்டு கொதிப்பவர்கள். களத்திலும் சிரித்து, மகிழ்ந்தே இருந்தவர்கள். இன்று எம் கரங்களில் கனக்கும் துப்பாக்கிகளில் மறைந்தே இருப்பவர்கள். எமக்குப் பாதை சொல்பவர்கள்.

9. லெப் நளினி
சாந்தி செல்லையா
5ம் கட்டை, முள்ளியவளை,
முல்லைத்தீவு.

வீரஜனனம்:- 20. 02. 1972
வீரச்சாவு:- 23. 03. 1992

சம்பவம்:- மணலாறு நேரடி மோதல்

10. வீரவேங்கை தபேந்தினி
மஞ்சுளாதேவி பூபாலசுந்தரம்
மாமுனை, செம்பியன்பற்று, தாளையடி.

வீரஜனனம்:- 26. 04. 1992
வீரமரணம்:- 1992. 04. 26

குருநகரில் தற்செயலாக கடலில் மூழ்கினார்.

11. மேஜர் வளர்மதி
சாந்தி செல்லத்துரை
கண்ணயபுரம், நாகதம்பிரான் வீதி,
வாழைச்சேனை.

வீரஜனனம் :- 1. 06. 1970
வீரமரணம் :- 16 04. 1992.

மட்டக்களப்பு தொப்பிக்கல்மலையில் சுகயீனம் காரணமாக மரணமடைந்தார்.

---

## அன்னையின்...

(18 ஆம் பக்கத் தொடர்ச்சி)

ருந்த வேளையில் அன்னை தாயென்ற நிலையில் இருந்து தனக்குரிய கடமையை நன்கு உணர்ந்து கொண்டார்.

கணவன், பிள்ளைகள் குடும்பம் என்ற உறவுகள் இருந்த போதும் தனக்கும் இந்த விடுதலைப் போரில் பங்குண்டு என்பதைப் புரிந்து கொண்டு தனது 58 வது வயதில் மக்களுக்காக மாபெரும் தியாகத்தைச் செய்ய முன்வந்தார். உண்ணாவிரதப் போராட்டம் ஆரம்பமானது. தொடர்ந்தது.

சர்வதேசத்திற்கு தனது சுயரூபத்தை மறைத்து வெறியாட்டம் போட்ட இந்தியப் படை அன்னையின் போராட்டத்தைக் கண்டு அஞ்சியது. உண்ணாவிரதத்தைக் குழப்பச்சூழ்ச்சிகள் செய்தது. ஆனால் அன்னையின் உறுதி இறுதி வரையிலும் நிலைத்தே நின்றது.

☆ "சுதந்திரத் தாய்நாட்டைப் பெறஒவ்வொரு தாயும் போராடுகின்றாள். மலரும் தமிழீழத்தில் நம் குழந்தைகள் இனிதாய் வாழப் போகின்றன."

என்றுரைத்த அன்னை தனது கோரிக்கைகள் நிறைவேறாத நிலையிலேயே 19.04.1988 அன்று எம்மைப் பிரிந்தார். எமது போராட்டத்தின் அவசியத்தை மக்களுக்கு உணர்த்திவிட்டு மறைந்தார்.

காந்திய தேசம் என்றும் அகிம்சைவழி வாழ்பவர் என்றும் உலகிற்குப் பொய் முகம் காட்டி வந்த இந்தியாவின் கபடத்தனம் இரண்டாவது தடவையாக உலகிற்கு வெளிக் காட்டப்பட்டுள்ளது.

தமிழீழப் பெண்களின் எழுச்சி வடிவமாகத் திகழும் அன்னையின் 4 ம் ஆண்டு நினைவு நாளிலே தமிழீழப் பெண்கள் அனைவரும் தமது கடமைகளைப் புரிந்து கொண்டு ஓரணி திரண்டு தமது மாபெரும் சக்தியை எமது தேசிய விடுதலைப் போராட்டத்துடன் இணைத்து எமது விடுதலையை வென்றெடுப்போம் என உறுதி கொள்வோம்.

## அனைத்துலக மகளிர் நாளையொட்டி தலைவர் திரு. வே. பிரபாகரன் அவர்கள் விடுத்த அறிக்கையிலிருந்து......

ஒரு விடுதலை இயக்கத்துடன் அணிசேர்ந்து கொள்வதன் மூலமே பெண்ணினம் தனது விடுதலை நோக்கிய இலட்சியப் பாதையில் வெற்றி பெற முடியும். பெண் விடுதலைக்கு களம் அமைத்துக் கொடுத்திருக்கும் எமது புரட்சி இயக்கத்துடன் பெண்ணினம் அணிசேரும் பொழுதுதான் எமது போராட்டமும் முழுமை பெறும்.

எமது சமுதாய அமைப்பில் நிலவி. வரும் ஒடுக்கு முறை அழுத்தங்களிலிருந்து பெண்ணினம் விடுதலை வேண்டி நிற்கிறது. நீண்ட, நெடுங்காலமாக எமது சமூகத்தில் வேரூன்றி வளர்ந்த மூட நம்பிக்கைகளும், இந்த மூடநம்பிக்கைகளிலிருந்து தோற்றம் கொண்ட சமூக வழக்குகளும் சம்பிரதாயங்களும், எமது பெண்களின் வாழ்க்கையை சீரழித்து வருகிறது. ஆணாதிக்க அடக்கு முறையாலும், வன்முறையாலும், சாதியம், சீதனம் என்ற கொடுமைகளாலும் தமிழீழப் பெண்ணினம் விபரிக்க முடியாத துன்பங்களை அனுபவித்து வருகின்றது.

இந்த ஒடுக்கு முறைச் சிறையிலிருந்து விடுதலை பெறுவதானால் பெண்ணினம் முதலில் தனக்கு எதிராக ஏவப்பட்டுவரும் ஒடுக்கு முறையின் தன்மைகளைப் புரிந்து கொள்ள வேண்டும். தனது சீரழிந்த வாழ்க்கை நிலையைச் சீரமைத்துக் கொள்வதனால் பெண்ணினம் தனது இழிநிலை பற்றி விழிப்புக் கொள்ள வேண்டும். தலைவிதி என்றும், கர்மவினை என்றும், தனக்காக விதிக்கப்பட்ட மனுநீதி என்றும், பழமை என்றும், பண்பாட்டுக் கோலம் என்றும், காலம் காலமாக மனவுலக இருளுக்குள் முடங்கிக் கிடந்த பெண்ணினம் விழித்தெழ வேண்டும்.

**விழிப்புத்தான் விடுதலைக்கு முதற்படி**

வாசகர்களிடமிருந்து அபிப்பிராயங்கள், ஆக்கங்கள் எதிர்பார்க்கப்படுகின்றன.

தொடர்புகட்கு:

**சுதந்திரப்பறவைகள்**

வெளியீட்டுப்பிரிவு,

கோண்டாவில்.

**அன்பளிப்பு: 15 ரூபா**



குற்றப் புண்கள்
சுமந்த மேனியில்
குருதியும் சீழும்
சேர்ந்து வடிந்ததில்
சமூக இதயம்
நாற்றமெடுத்தது.

தப்பினைத் தனியே
சுமந்த தாய்மை
தொப்பூழ்க் கொடியின்
தொடர்பறு முன்னமே
தொண்டையை நெரித்ததில்
துவண்டு போனது.

உதிரம் கொடுத்து
உயிரை வளர்க்கும்
இயற்கை நியதியை
சாட்சியாய் வைத்து
தாய்க்கு மட்டுமே
தண்டனை வழங்கும்
நாற்ற மெடுத்த
சமூக நீதியின்
நாடித் துடிப்பு
அடங்கிப் போகட்டும்.

மண்ணில் விழமுன்னே
தொண்டைக்குள் மரணா
திணிபட்டுப் போன
பிஞ்சுக் குழந்தைகளின்
நெரிபட்ட குரலோசை
உலக ஆன்மாவை
உசுப்பி எழுப்பட்டும்.